Regd. No. 2975 ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் - 367

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர், மஹாவித்வான்

# SRI RAMANUJAN

EDITOR:
Mahamahimopadhyaya
P. B. ANNANGARACHARYA, Kanchipuram-631503.

வருட சந்தா ரூ. 10 ஜீவித சந்தா ரூ. 25

பேரருளாளன் பெருந்தேவித்தாயார்
திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர்
திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி *
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி *
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

காளயுக்திஷு கார்த்திகைமீ

# திருமோகூரில் ஷஷ்ட்யப்த பூர்த்தி

(ஸ்ரீமான். R. ரங்கராஜன், M.A. மதுரை.)

திருமோகூரில் ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தனாய் ஸர்வவிதபந்துவாய்ப் பரமாப்தனாய் மனோஹர ரூப ஸம்பந்நனாய்ப் பெருமதிப்பனான காளமேகம் என்னும் வழித்துணை எம்மானுக்கு அத்தாணிச் சேவகம் பூண்டொழுகிவரும் அர்ச்சகர் ஸ்ரீ உவே ச ஸ்ரீநிவாஸப ஸ்வாமிக்கு 15 11—78 அன்று ஷஷ்ட்யப்த பூர்த்தி மஹோத்ஸவம் அன்பர்களால் மி விபவமாய்க்கொண்டாடப்பட்டது. அதற்கு அங்கமாக ஐந்து தினங்களில் பலதிவ்யதேசா லிருந்து எழுந்தருளியிருந்த விலக்ஷணாதிகாரிகளால் திவ்யப்ரபந்தம். வேதம் ஸ்ரீபா ஸ்ரீராமாயணம் இத்யாதி பாராயணங்கள் சிறப்பாக நடந்தேறின.

ஸ்ரீமதுபயவே சதாபிஷேகம் ஸ்வாமி, வேளுக்குடி வரதாச்சாரியார் ஸ்வாமி. ஸுதர்சனம் ஆசிரியர் S. கிருஷ்ணய்யங்கார் ஸ்வாமி, கனபாடி சௌரிராஜய்யங்கார் ஸ்வாமி. திருவாலி எம்பார் திருவேங்கடாசசாரியார் ஸ்வாமி, மதுரை R ரங்காஜன், M. A. ஆகியோர்களின் உபந்யாஸங்களும் நடைபெற்றன. ஸ்ரீபாஞ்சராத்ரசாஸ்த்ரங்களில் பாண்டித்யம் பெற்று ஸம்ப்ரோக்ஷணாதி ப்ரஹ்மோத்ஸவங்களை நடத்திவரும் அர்ச்சக ஸ்வாமிக்கு 'ஸ்ரீபாஞ்சராத்ர ப்ரதீபம்' என்னும் விருது வழங்கப்பட்டது.

# ஷஷ்ட்யப்த பூர்த்தி வைபவம்



திருமணஞ்சேரி ஸ்ரீமான் உ வே. வீ. வெங்கடேச ஐயங்கார், (D.C.T O Retd.) அவர்களது ஷஷ்டியப்தபூர்த்தி 20—9—78 ஸ்ரீசைலம் கிருஷ்ண நகர், பல்லாவரத்தில் திவ்யப்ரபந்த வேதபாராயணங்களுடன் நடந்தது. பெரியகோவிலிலிருந்து வேதபாராயணத்துக்கு

இதன் தொடர்ச்சியை ராபர் மூன்றுவது பக்கத்தில் பார்க்க

# ஸ்ரீராமாநுஜன்-367



ஆசிரியர்:
ஸ்ரீ காஞ்சீ. பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்

தொகுதி 31 | காளயுக்தி௵ கார்த்திகைமீ 10—12—78 | பகுதி 7


## கார்த்திகைத் திங்கள்

நிகழும் கார்த்திகை மாதத்தில் பக்தர்கள் அநுபவிக்கத்தக்க விசேஷங்கள் மூன்றுகும்; (1) திருச்சானூரென்கிற திருச்சுகனூரில் தாயாருடைய ப்ரஹ்மோத்ஸவம்ஒன்று ; இது பஞ்சமீ தீர்த்தமென வழங்கப்படும், கார்த்திகைமீ 9உ முதல் (25—11—78) சுக்கிலபக்ஷபஞ்சமி அன்று அவப்ருதமாகும். பத்து நாளும் வாஹனப் புறப்பாடுகளுடன் உத்ஸவம் அற்புதமாக நடைபெறும். திருமலை திருப்பதியிலிருந்து பெரிய சிறிய கேள்வி ஜீயர் ஸ்வாமிகள் 20, 25 அத்யாபகஸ்வாமிகளுடன் எழுந்தருளியிருந்து வெகு விலக்ஷணமாக நடத்தி வைக்கும் மஹோத்ஸவமிது.



(2) வாய்த்தபுகழ் மங்கையர்கோன் மாநிலத்தில் வந்துதித்த கார்த்திகை நாள் திருவாலி திருநகரியில் மிக விசேஷமாக அநுபவிக்கத்தக்கதாம் திருமங்கையாழ்வாருடைய திருநக்ஷத்ரமஹோத்ஸவம் திவ்யதேசங்கள் தோறும் நடைபெற்றாலும் திருவவதார ஸ்தலமான திருவாலி திருநகரியில் நடைபெறுவது அத்யத்புதம் என்னத்தகும். சென்னையில் வாழும் ஆர்யவைச்யபக்த சிகாமணிகள் பலர் பத்து நாளும் அங்கே சென்றிருந்து ஸ்ரீ வைஷ்ணவததீயாராதனை முதலியவற்றை வெகு விசேஷமாக நடப்பித்து இம்மஹோத்ஸவத்தை மிக மிகச் சிறப்பிக்கின்றனர். கார்த்திகை மீ 17உ முதல் (3—12—78) கார்த்திகைமீ 26உ (12—12—78) தேதி வரையில் நடைபெறும்.

(3) நம் நம்பிள்ளைமஹோத்ஸவாநுபவம். (இது பற்றி அடுத்தபக்கம்காண்க.)

ஸ்ரீ

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

# ஸ்ரீகாஞ்சீ நம்பிள்ளை மஹோத்ஸவ ப்ரகடனம்
# (காளயுக்தி ௵ 1978)

ஸ்ரீ காஞ்சி தேவப்பெருமாள் ஸன்னிதியின் திருமுன்பே திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் **நம்பிள்ளைக்கு** நாளது கார்த்திகைமீ 17௳ **3—12—78** ஞாயிற்றுக்கிழமை பூராட நக்ஷத்திரத்தில் திருவவதார மஹோத்ஸவம் தொடக்கமாகி கார்த்திகைமீ 26௳ **12—12—78** செவ்வாய்க்கிழமை திருக்கார்த்திகைத் திருநக்ஷத்திரத்திலே சாற்றுமுறையாகும். பத்து நாட்களிலும் அலங்கார திருமஞ்சனமும் இரண்டு வேளைகளிலும் திவ்யப்ரபந்தஸேவை கோஷ்டிகளும் ததீயாராதனமும் விசேஷவைபவமாக நடைபெறும். வித்வான்களின் உபந்யாஸங்களும் நடைபெறும். ஆஸ்திகர்கள் அனைவரும் வந்திருந்து அநுபவித்து ஆனந்திக்கவேணும். இம்மஹோத்ஸவ ஸேவார்த்தமாக வெளியூர்களிலிருந்து வரும் பக்த பாகவதோத்தமர்களுக்கு ஸ்தலவசதி முதலிய சௌகரியங்கள் விசேஷமாகச் செய்து கொடுக்கப்படும். ஸ்ரீ வைஷ்ணவ பக்த சிகாமணிகள் குழாங்கூடியிருந்து அநுபவிக்கக்கூடிய மஹோத்ஸவமிது.

சாத்துமுறையன்று ஸ்ரீ யதோக்தகாரி எம்பெருமான் புறப்பாடு கண்டருளி நம்பிள்ளை ஸன்னிதியிலெழுந்தருளியிருந்து நடைபெறும். இரண்டாயிரம் ரூபாய் செலவில் விசேஷ வைபவங்களுடன் நடைபெற்று வருகின்ற இந்த மஹோத்ஸவத்திற்கு பக்தர்கள் உகந்து யதாசக்தி பொருளுதவிபுரிந்து ஆசார்ய ஸார்வபௌமருடைய இம்மஹோத்ஸவத்தை மிகவும் சிறப்பிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

சின்னகாஞ்சீபுரம்,
20—11—78

இங்ஙனம்,
**P. B. ANNANGARACHARYA,**
*Founder, Sri Nampillai Sannidhi*

## சந்தாதாரர்களுக்கு அறிவிப்பு

நமது இந்தப் பத்திரிகையை ஆப்தர்களுக்கும் வித்வான்களுக்கும் சந்தாப் பணத்தை எதிர்பாராமலே பாரிதோஷிகமாக அனுப்பிவருகிறோம். அப்படி இருநூறு நபர்கள் தேறுவர்கள். சந்தா செலுத்துபவர்களாக எண்ணூறு நபர்களை எண்ணியிருக்கிறோம். ஆனால், சந்தாவை யனுப்பும் நபர்கள் இருநூற்றுக்குக் குறைவாகவேயிருப்பார்கள். பல வருஷங்களாக பாக்கியுள்ளவர்கள் அதிக நபர்கள் தேறக்கூடும். அவர்களுக்கெல்லாம் பத்திரிகையை நிறுத்திவிடவும் மனமில்லை. அவர்களுக்கு நாம் தனித்தனியே கடிதங்கள் எழுதவும் முடியவில்லை. இதனால் நினைவூட்டுகிறோம். (காரியதர்சி)

## கீதாசார்யன்

திருவல்லிக்கேணி ஸ்ரீமான் M. A வெங்கடகிருஷ்ணன் M. A. அவர்களை ஆசிரியராகக் கொண்டு நடைபெற்று வரும் கீதாசார்யன் பத்திரிகையின் இரண்டாமிதழ் வரப்பெற்றோம். அற்புதமான வியாஸங்கள் வெளிவந்துள்ளன. ஆஸ்திகர்கள் விரும்பி வாசிக்கத் தக்க பத்திரிகை இது. இதற்கு வருடச்சந்தா 8 ரூ. கிடைக்குமிடம்- **M. A. வேங்கடகிருஷ்ணன், M.A.** 7, தென்னண்டை மாட வீதி திருவல்லிக்கேணி, Madras-5, 600005.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

# திருமலை திருப்பதி பெரிய ஜீயர் மடத்தின் வரலாறு

(திருப்பதி ஸ்ரீ உவே ந்யாயவேதாந்த வித்வான், திருமலை அனந்தாண்பிள்ளை, குன்றபாக்கம் கிருஷ்ணமாசாரியர் திருமலை மடத்திலிருந்து சேகரித்தது)

எம்பெருமானார் தம்முடைய முப்பத்தைந்தாவது திருநக்ஷத்திரத்தில் திருமலையில் ஒரு மடத்தை ஏற்படுத்தியருளினார்; சகம் 974, கி.பி. 1052ல் நாலைந்து வருடங்கள் ஏகாங்கிகள் மூலமாகவே திருவேங்கடமுடையான் கைங்கர்யத்தை நடத்திவைத்து, கி பி. 1057ல் அப்பன் சடகோப ராமாநுஜஜீயரை நியமித்தார். எம்பெருமானாரே இம்மடத்திற்கு முதல் ஜீயர். இரண்டாமவர் – அப்பன் சடகோப ஜீயராவர். பிறகு முறையாக வந்த—11 வது ஜீயரான அப்பன் ஸ்ரீரங்கராமாநுஜ பெரிய ஜீயரிடத்தில் ஆச்ரயித்துச் சிறிய ஜீயராய்க் கைங்கர்யம் செய்து வந்த அப்பன் திருவேங்கட ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி திருவேங்கடமுடையான் நியமனத்தால் (பெரிய ஜீயர் ஜீவதசையில் எழுந்தருளியிருக்கும் போதே) யதிபதிபுநரவதாரமான மணவாளமாமுனிகளிடத்தில் திருவிலச்சினை பெற்று அஷ்டதிக்கஜாந்தர்ப்பூதரான ஷை பெரிய ஜீயர் பரமபதித்தவுடன் கி பி. 1506ல் பெரிய ஜீயராய் அபிஷிக்தரானார்.

சிறிய ஜீயருக்கு ஆசார்யரானமையால் மணவாளமாமுனிகள் இப்பெரிய ஜீயர் மடத்தில் பன்னிரண்டாவது பெரிய ஜீயராகப் பரிகணிதரானார் 13வது ஜீயர் ஷை அஷ்டதிக்கஜரான திருவேங்கடராமாநுஜஜீயர் ஸ்வாமி; இவருடைய திருநக்ஷத்ரம் புரட்டாசித் திருவோணமாதலால். இப்பொழுதும் அத்திருநக்ஷத்ரோத்ஸவம் 10நாட்கள் திருமலை மடத்தில் பரிபாலிக்கப் பட்டு வருகிறது. இப்பரம்பரையில் இப்போது எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமத்பரமஹம்ஸ ஸுந்தரராமாநுஜ பெரியஜீயர் ஸ்வாமி 40வது பட்டத்தில் அபிஷிக்தராயிருக்கிறார். இப்போதுள்ள சிறிய ஜீயர் கோவிந்தராமாநுஜ ஜீயர் ஸ்வாமி.

39 வது பட்டத்தில் :—

அப்பன் ஸ்ரீரங்கராமாநுஜ பெரிய ஜீயர் ஸ்வாமி பூர்வாச்ரமத்தில் ஸ்ரீ உ. வே. ஸாது ராமாநுஜாசார்யஸ்வாமி என்னும் பெயர்பூண்டவர் (ஸ்ரீவில்லிபுத்தூர்) இவர் 29-8-1940ல் சிறிய ஜீயர் பட்டத்திற்கு எழுந்தருளியபின்பு 16-5-60ல் பெரிய ஜீயரின் ஆஸ்தானம் அலங்கரித்து 17-4-75ல் திருநாடலங்கரித்தருளினார். பரமபதிக்கும்போது 85 திருநக்ஷத்ரங்களிருக்கலாம்.

38 வது பட்டத்தில்;—

அப்பன் திருவேங்கடராமாநுஜஜீயர் ஸ்வாமி பூர்வாச்ரமத்திருநாமம் — திருக்கண்ணபுரம் ராகவாசார்ய ஸ்வாமி என்பது. இவர், 1929ல் சின்னஜீயர் பட்டத்தில் எழுந்தருளி—1935ல் பெரிய ஜீயர் ஸ்வாமியாகி 1960ல் திருநாடலங்கரித்தருளினார். இவருக்குப் பரமபதிக்கும்போது திருநக்ஷத்திரம் 80க்குமேல் இருக்கலாம்,

37 வது பட்டத்தில்:—

அப்பன் கோவிந்தராமாநுஜ ஜீயர் ஸ்வாமி. ஊர் — காழிச்சீராம விண்ணகரம் (சீர்காழி) 1908ல் சிறியஜீயரானார். 1910ல் பெரியஜீயரானார். 1935ல் பரமபதிக்கும்போது ஏறக்குறைய 90 திருநக்ஷத்திரங்களிருக்கும்'

36 வது பட்டத்தில்,—

அப்பன் வகுளாபரணராமாநுஜ ஜீயர் ஸ்வாமி 1906ல் சிறிய ஜீயர், 190?ல் பெரிய ஜீயர் ?ல் திருநாடலங்கரித்தருளினார்,

35 வது பட்டம்—அப்பன் விஷ்ணுசித்தராமாநுஜ ஜீயர் ஸ்வாமி
1893ல் சின்ன ஜீயராகி -- 1906ல் பெரியஜீயரானார் 1906ல் பரமபதித்தருளினார்

34 வது பட்டம்—அப்பன் சடகோபராமாநுஜ ஜீயர் ஸ்வாமி
1875ல் சிறிய ஜீயராகி 1893ல் பெரிய ஜீயரானார் 1906ல் பரமபதித்தார்.

33 வது பட்டம்—அப்பன் ஸ்ரீரங்கராமாநுஜ ஸ்வாமி ஜீயர்
1874ல் சின்ன ஜீயராகி 1875ல் பெரிய ஜீயரானார் 1893ல் பரமபதித்தார்

32 வது பட்டம்—அப்பன் திருவேங்கடராமாநுஜ ஜீயர் ஸ்வாமி
1860ல் சின்ன ஜீயராகி 1874ல் பெரிய ஜீயரானார் 1875ல் பரமபதித்தார்.

31 வது பட்டம்—அப்பன் வகுளாபரணராமாநுஜ ஜீயர்ஸ்வாமி
1838ல் சின்ன ஜீயராகி 1860ல் பெரிய ஜீயரானார் 1874ல் பரமபதித்தார்.

30 வது பட்டம்—அப்பன் திருவேங்கடராமாநுஜ ஜீயர் ஸ்வாமி
1833ல் சின்னஜீயராகி 1833ல் பெரிய ஜீயரானார் 1860ல் பரமபதித்தார்

29 வது பட்டம்—அப்பன் வகுளாபரணராமாநுஜ ஜீயர் ஸ்வாமி
1831ல் சின்ன ஜீயராகி 1833ல் பெரிய ஜீயரானார் 1838ல் பரமபதித்தார்.

(தொடரும்.)

அடுத்த இதழில் விரிவாகத் தெரிவிப்போம்,

---

# கல்கியில் ஸ்ரீ ஜகத் குருஸ்வாமிகளின் கட்டுரை

**12—11—78ல் வெளிவந்த கல்கியில் காமகோடி பீடாதிபதிகள் எழுதி வெளியிட்டிருப்பதொரு கட்டுரையின் முடிவிலுள்ள பாரா இது:—**

*"சரணம் கரவாணி தாவகௌ சரணௌ. பிற்காலத்தில் ஸ்ரீராமாநுஜர் இந்த சரணாகதியைத்தான் முக்யமான உபாயமாக வைத்து விசிஷ்டாத்வைதத்தை உருவாக்கினார். ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு முக்கியமானவை அஷ்டாக்ஷரம், த்வயம் என்ற இரு மந்திரங்கள், கீதையின் சரம ச்லோகமான 'ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய' ச்லோகம், விபீஷண சரணாகதியின் போது ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தி தம்முடைய சரணாகத ரக்ஷக விரதத்தைச் சொல்கிற ராமாயண ச்லோகம் ஆகியவை. ஸ்ரீ ராமாநுஜருக்குப் பிற்பாடு வடகலை, தென்கலை என்று இரண்டாகப் பிரிந்ததும் இந்த சரணாகதிக்குள்ளேயே இருக்கிற மாறுபாடுகளை வைத்துத்தான் பூனைக்குட்டி தனக்கென்று ஒரு பிரயத்தனமும் இல்லாமல் கிடக்கிறதல்லவா? அதைத் தாய்ப் பூனை தானே வாயில் கௌவிக்கொண்டு போகிறது. இம்மாதிரி நாம் பெருமாள் விட்ட வழி என்று கிடப்பதுதான் நிஜ சரணாகதி யென்பது தென்கலைக்காரர்களின் அபிப்பிராயம். இதற்கு 'மார்ஜார கிசோர ந்யாயம்' என்று பேர். மார்ஜாரம் என்றால் பூனை; கிசோரம் என்றால் குட்டி. "பூனைக்குட்டி முறை" தான் தென்கலை. வடகலைக்காரர்களின் அபிப்பிராயம் என்ன வென்றால், 'குரங்கு குட்டி என்ன பண்ணுகிறது? அது. தானே தாய்க் குரங்கை இறுகக் கட்டிக் கொண்டிருக்கிறது! இம்மாதிரி நாமேதான் பிரயத்தனம் பண்ணி பகவானைப் பிடித்துக் கொள்ளவேண்டும், இந்த ஒரு யத்தனம் தவிர பாக்கி விஷயங்களில் தான் அவன் விட்ட வழி என்று இருக்க வேண்டும், என்று 'மர்க்கடகிசோரந்யாய'மாக இவர்கள் சரணாகதியைச் சொல்கிறார்கள். 'மர்க்கடம்'—குரங்கு. மர்க்கட கிசோர ந்யாயம்—குரங்கு குட்டி முறை.*

(தொடரும்)

*இது இப்போது எழுதின கட்டுரை அன்று. (1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள் கட்டுரைகளிலிருந்து தொகுத்ததாம்.)-*அடுத்தபக்கம் காண்க,

# மர்க்கடகிசோரமார்ஜாரகிசோரந்யாய விவரணம்

கல்கியில் வெளிவந்த கட்டுரையை முன்னம் கண்டீர்களல்லவா? இது புதியதன்று; ஏற்கனவே சிலவாண்டுகட்கு முன்பும் வெளிவந்துள்ளதாகத் தெரிவிக்கப்படுகிறது. நாம் முதன்முதலாக இப்போதுதான் கண்டோம். அதனாலென்ன? சிலதத்துவப்பொருள்களை இங்குத் தெரிவிக்க விரும்புகிறோம். பிள்ளைலோகாசார்யர் முமுக்ஷுப்படி யென்னும் ரஹஸ்யத்தில் "அவனை இவன் பற்றும்பற்று அஹங்காரகர்ப்பம், அவத்யகரம், அவனுடைய ஸ்வீகாரமே ரக்ஷகம்" என்பது ஒரு சூர்ணை. அதற்கு முன்பும் பின்புமுள்ள பல சூர்ணைகளை விசதவாக் சிகாமணிகளான மாமுனிகளின் வியாக்கியானத்தோடு குருமுகமாக ஸேவிக்கப்பெற்றவர்களுங் கூட எளிதில் உணரமுடியாத ஸம்பிரதாய மஹார்த்தம் மதாந்தரஸ்தர்களுக்கு உணரவெளிதன்று. ஸ்ரீராமாநுஜர் இன்னின்ன ஆசாரியர்கள் பக்கலில் இன்னின்ன க்ரந்தங்களை அதிகரித்தார்—என்பதைத் தெரிவித்தருளாநின்ற ஸ்ரீ வேதாந்த தேசிகன் "திருக்கோட்டியூர் நம்பி பக்கலிலே ரஹஸ்யார்த்தங்கள் சிக்ஷித்தார்" என்றருளிச் செய்தார். "ரஹஸ்யார்த்தங்கள் க்ரஹித்தார்" என்னாதே 'சிக்ஷித்தார்' என்றருளிச் செய்ததன் மருமத்தை ஆழ்ந்து அறிவாரில்லையே! ஏற்கனவே க்ரஹித்த அர்த்தங்களை மிகமிகப் பரிஷ்காரப்படுத்திக்கொள்வதுதான் சிக்ஷிக்கையாகும். மேலெழுந்தவாரியாகக் கொள்ளுகிற அர்த்தங்கள் வேறு; சிக்ஷிக்கப் பெறுகிற அர்த்தங்கள் வேறு. "உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே" என்றும் 'ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே' 'த்வத்பாத மூலம் சரணம் ப்ரபத்யே" என்றும் சொல்லிக்கொண்டு எம்பெருமானைத் தொழுகிறவர்கள் நாம், பிள்ளைலோகாசார்யரும் இங்ஙனே தான் அநுஸந்தித்தவர் இப்படி யிருக்க, "எம்பெருமானை நாம் பற்றுவது கூடாது. அவன் பற்றவேணும்" என்றால் இது ஸம்பாவிதமோ? "த்வாம் ஸ்வீகரோமி" என்று எம்பெருமானோ சொல்லுகிறான்? இல்லையே. அப்படி யிருக்க. "அவனுடைய ஸ்வீகாரமே ரக்ஷகம்" என்றும், "பரகதஸ்வீகாரமே பாங்கு'; என்றும் சொல்லுகிறவர்களின் கருத்து என்னவென்று ஆராய வேண்டாவோ! இங்ஙனே யருளிச் செய்பவர் பிள்ளைலோகாசாரியர் மட்டுமே யல்லர்; தேசிகனும் இப்படித்தானருளிச் செய்கிறார். அவர் நன்கு விளக்கி யிருப்பதை மேலே விளக்குவோம்,

இங்கு மருமமென்ன வென்றால் கேண்மின்; எம்பெருமானைப் பெறுகை சேதநனுக்குப் பேறா? சேதநனைப்பெறுகை எம்பெருமானுக்குப்பேறா? என்று ஆராய்ந்து முடிவுகட்டவேணும், எம்பெருமானைப் பெறுகை சேதநனுக்குப் பேறு என்று தேறிவிட்டால் கல்கியில் வெளிவந்த கட்டுரையில் கண்ட மர்க்கடகிசோர நியாயம் வெற்றி பெற்றதாகும். ஸ்ரீராமாநுஜர்க்கோ, வேதாந்த தேசிகனுக்கோ. மற்றும் எந்த ஆசிரியர்க்கோ இங்ஙனே கருத்து திருவுள்ளத்தில் ஒரு மூலையிலும் கிடையாது. சேதநனைப்பெறுவது ஈச்வரனுக்கு லாபம் என்பதே நம்முடைய ஸகல ஆசார்யர்களும் கண்ட நிரவத்யமான சாஸ்த்ரார்த்தம். அதனை விவரிக்கக் கேண்மின்

"ஸ்வாமீ ஸ்வசேஷம் ஸ்வவசம் ஸ்வபரத்வேந நிர்ப்பரம் ஸ்வதத்த ஸ்வதியா ஸ்வார்த்தம் ஸ்வஸ்மிந் ந்யஸ்யதி மாம் ஸ்வயம்' என்பது வேதாந்ததேசிகனுடையஸூக்தி; இதில் ஒன்பதின் கால் ஸ்வசப்த ப்ரயோகம் பண்ணியிருக்குமழகு காண்க. இதனால் சேதநனுடைய முயற்சி நாற்றம் வேரற அறுக்கப்படுகின்றமை யறிந்தால் உபாயமென்றும் ஸாத்யோபாயமென்றும் வாய்திறக்க வழியேயில்லை என்பது எளிதிலுணரப்பட்டதாகும்.

இன்னமும் தேசிகனுடைய ஸூக்திகளில் 'குணக்ஷதலிபிக்ரமாத் உபநிபாதிந: பாதி ந:' என்பது அற்புதமான ஸ்ரீஸூக்தி. "புழு குறித்தது எழுத்தாமாப்போலே" என்ற பெரியவாச்சான்

பிள்ளையின் ஸ்ரீஸூக்தியை இங்ஙனே ச்லோகமாக்கி யருளினார். புழுவானது நிலத்தில் செல்லும் போது ஒருஎழுத்து எழுதவேணுமென்னுமெண்ணம் அதற்கில்லை; ஆனாலும் அதன் செல்லுகையை நாம் உற்றுநோக்கினால் ஏதேனும் ஒரு எழுத்து தேறினதாக ஆகக்கூடும்; இதற்கு குணாக்ஷர ந்யாய மென்று பெயர் குணமென்று புழுவுக்குப்பெயர்; ஒ-ஈவர்க்கசதுர்த்தாக்ஷரம். இந்த ந்யாயத்தாலே யாத்ருச்சிகமாக நல்லதாய் முடிகின்ற நமது செயலை வியாஜமாகக்கொண்டு எம்பெருமான் ஸ்வீகரிக்கின்றான் என்பதே தேறும்.

அர்த்தபஞ்சகத்தில் 'ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோ ரூபம்'' என்பது முதலர்த்தமாகவும், "ப்ராப்துச்ச ப்ரத்யகாத்மந ''என்பது இரண்டாமர்த்தமாகவுமுளது. இதனால்ஜீவாத்மா ப்ராப்தா என்று விளங்குகின்றது ''ப்ரஹ்மவிதாப்நோதி பரம்'' என்கிற உபநிஷத் வாக்கியமும் ஈச்வரனை ப்ராப்யனென்றும், சேதநனை ப்ராப்தாவென்றும் ஸ்பஷ்டமாகச்சொல்லியிருக்கையாலே 'ஈச்வரலாபம் சேதநனுக்குப் புருஷார்த்தம்' என்றே க்ரஹிக்க நேரும்; ஆனால் உண்மை அதுவன்று; ஈச்வரனுக்கு சேதநலாபம் புருஷார்த்தம்'' என்பது எம்பெருமானார் தரிசனத்தின் அந்தரங்கமான பொருள், கீதாதாத்பர்ய சந்த்ரிகையில் தேசிகன் வெகு அழகாகக் காட்டியுள்ளதொன்றுகேளீர் கீதையின் ஒன்பதாமத்யாயத்தின் முடிவிலுள்ள*மந்மநா பவ* என்கிற ச்லோகத்தின் பாஷ்யத்திற்கு விவரணமெழுதுகையில் ''ஆச்ரிதஸம்ரக்ஷணம் ஸ்வலாபம் மத்வா ப்ரவர்த்ததே'' என்றருளியிருப்பது காண்க. ''ப்ராப்தாவும் ப்ராபகனும் ப்ராப்திக்கு உகப்பானும் அவனே''என்பது ஸ்ரீவசநபூஷண ஸ்ரீஸூக்தி, சேதனனைப்பெறுவது ஈச்வரனுக்குப் பேறு என்றால் இவ்வர்த்தம் ஹ்ருதயத்தில் அவகாஹிப்பது சிரமமேயாகும் ஆனாலும் எளிதாக உணர்த்துகிறோம். சேதநன் முக்தனாகிப் பரமபதத்தில் சென்றபின் அங்கு என்ன கோஷிக்கிறானென்பதை நம் உபநிஷத்து தெளிவிக்கின்றது. (''அஹமன்ன மஹமன்ன மஹமந்நம்'' என்பது முக்தனுடைய முதல்வார்த்தை. 'பகவானுக்கு நான் அன்னமாகிறேன்' என்று ஒரு தடவைக்கு மூன்று தடவையாக இதில் சொல்லுகிறது. இதனால் ஈச்வரனானவன் சேதனனைப் பெற்று அநுபவிக்க வேணுமென்று பெரும்பசி கொண்டிருந்தானென்றும், அப்பசி முக்தாத்மாவால் தீருகிறதென்றும் ஸ்பஷ்டமாகிறது. இல்லையாகில் 'அஹமந்நம்' என்று ஓதவேண்டியதில்லையன்றோ [அஹம் அந்நாத: அஹம் அந்நாத அஹம் அந்நாத:]என்றும் உடனே வருகிறது. எம்பெருமானுக்கு இவன் அன்னமாகி அவன் பசியைத் தீர்த்தபிறகு இவனும் தன் பசிதீருவதாக ஓதிற்று; ''அஹமந்நம் அந்நமதந்த மத்மி'' என்கிறமேல்வாக்கியத்தினாலும் விவரிக்கப்படுகிறது. இதன் தாற்பரிய மென்னவென்றால் முக்தனாகிய தன்னை யநுபவித்துஎம்பெருமான் விடாய் தீர்ந்து மகிழ்ந்து நிற்கையில் அந்த மகிழ்ச்சியைக்கண்டு தான் மகிழ்கிறான். இவன் அசேதநமல்லாமல் சேதநனாய் ஞானானந்தங்களை வடிவாக வுடையனாயிருக்கையாலே தன்னுடைய ஆனந்தமும் பயன் பெற்றதாக வேணுமே. அசித்திற்காட்டிலே ஒரு வாசி ஏற்படவேணுமே. தன்னைப் பெற்று எம்பெருமான் ஆனந்திப்பதைக் கண்டு' நம்மால் எம்பெருமானுக்கு இப்படியொரு ஆனந்தமுண்டாயிற்றே!' என்று அநுஸந்தித்து அதனால் தான் ஆனந்திக்கையே ப்ராப்தம், ''அஹமந்நாத ;அஹமந்நமந்நமதந்தமத்மி என்ற உபநிஷத்தின்கருத்து இதுவேயாம்.

ஆழ்வாருடைய திருவாய்மொழியில் ''வாரிக்கொண்டு உன்னை விழுங்குவன் காணிலென்று ஆர்வுற்ற என்னையொழிய என்னின் முன்னம் பாரித்துத், தானென்னை முற்றப் பருகினான் (9–6—10) என்கிற பாசுரம் மருளை நன்கு அறுக்கும்.

எம்பெருமானார் ஸ்ரீபாஷ்யத்தின் முடிவில் *அநாவ்ருத்தி ஸூத்ர பாஷ்யத்தில் ''நச பரம புருஷஸ் ஸத்ய ஸங்கல்ப: அத்யர்த்த ப்ரியம் ஜ்ஞானிநம் லப்த்வா கதாசிதாவர்த்தயிஷ்யதி'' என்கிற ஸ்ரீ ஸூக்தியினால் 'சேதனலாபமே ஈச்வரனுக்குப் பேறு' என்கிற ஸத்யம்

ப்ரதாய ரஸ்ய ரஹஸ்யப் பொருளை ஸ்தாபித்தருளினார். அங்கே விஷயம் என்னவென்றால்; மோக்ஷத்திற்குச் சென்ற சேதநனுக்குத் திரும்பி வருதல் உண்டா? இல்லையா? என்று விசாரம் வந்தது. ஈச்வரன் கேட்பாரற்றஸ்வதந்திரனாதலால் அந்த ஸ்வாதந்திரியத்தினால்முக்தாத்மாவைத் திருப்பியனுப்பி விடக் கூடுமன்றோ? என்கிற சங்கையுண்டாக ஸூத்ரகாரர்* அநாவ்ருத்திச் சப்தாத்* என்று ஸூத்ரமியற்றினார். முக்தாத்மா ஒரு நாளும் திரும்பி வருவதில்லையென்று சாஸ்த்ரம் முறையிட்டிருக்கையாலே புநாவ்ருத்திகிடையாதென்று ஸூத்ரகாரர் சொல்லி விட்டார்; பாஷ்யகாரரும் இவ்வர்த்தத்தை வியாக்கியானித்தார்; ஆனால் தோன்றின சங்கைக்கு த்ருப்திகரமான ஸமாதானம் வந்ததாகவில்லை. ஸூத்ர பாஷ்யாவதாரிகையில் ஈச்வரன் ஸ்வதந்திரனாகையாலே கேட்பாரற்று முக்தாத்மாவை மீண்டும்கீழேதள்ளி விட நினைத்தால் என் செய்வது? என்பது சங்காசரீரம். தள்ள மாட்டானென்று சாஸ்த்ரம் சொல்லியிருக்கையாலே என்று விடைகூறினதால் என்ன ஸமாதானம்வந்ததாகும்? சாஸ்த்ரத்தையும் மீறிச் செய்வதன்றோ ஸ்வதந்த்ரக்ருத்யம். அப்படிப்பட்ட ஸ்வாதந்திரியத்தாலே ஈச்வரன் ஒன்று செய்யப் புகுந்தால் சாஸ்த்ரம் குறுக்கே நிற்குமோ? என்றன்றோ இங்குப் பூர்வபக்ஷியின் கருத்து. அதற்குத் தினவடங்கச் சொல்லவேண்டிய ஸமாதானத்தை ஸூத்ரகாரர் சொல்லாத குறைதீர நம் பாஷ்யகாரர் வெகு அழகாக அருளிச்செய்கிறார்-ஈச்வரன் ஸ்வதந்திரனேயானாலும் உன்மத்தனல்லன், மூர்க்கனல்லன், அரஸிகனல்லன்; ஸத்யஸங்கல்பனென்று பேர்பெற்றவன்; தன்னுடைய மநோரதத்திற்கு மாறுபாடாக நடந்துகொள்பவனல்லன். ஒருசேதநனைப் பெறுவதற்கு அவன் என்னபாடு படுகிறான் தெரியுமோ? அவன் ஸ்ருஷ்டி பண்ணுவதும் அவதாரங்கள் பண்ணுவதும் சேதநரை லபிக்கைக்காகவன்றோ? எவ்வளவோ தவப்பயனாக ஒரு சேதநனை லபித்தபின்பும் ரஸிகனான அப்பரம புருஷன் அவனை இழப்பனோ?—என்று இவ்வளவுமெழுதி நமது பாஷ்யகாரர் சங்காபரிஹாரத்தைத் தலைக்கட்டியுள்ளார். இதில் "பரம புருஷ ஜ்ஞாநிநம் லப்த்வா" என்கிற ஸ்ரீஸூக்திவிந்யாஸமானது எம்பெருமானார் திருவுள்ளத்தில் திருவாய்மொழி யமுதக்கடல் அலையெறிகிறபடியை நன்கு காட்டுகிறது. கீதையில் "ஸ மஹாத்மா ஸுதுர்லப:" என்று எம்பெருமான் தானே சோதி வாய்திறந்து பணித்ததையும் உடனே உதாஹரிக்கிறார். தாரக போஷக போக்யமானவை எல்லாம் கண்ணனென்றிருக்கிற மஹாத்மா மிகவும் துர்லபன்—என்று பகவான் தன் திருவாக்காலே சொன்னால் அப்படிப்பட்டவொரு மாஜ்ஞானியை லபிக்கைக்கு அவன் எவ்வளவோ பாடுபடுகிறவன் என்பது விளங்க வில்லையா? ஆகவே சேதந லாபமே ஈச்வரனுக்குப் பேறு என்கிற ஸித்தாந்தம் நன்கு பொலிந்ததாயிற்று.

யத்கிஞ்சித்ஸுக்ருதகரணம், பேற்றுக்கு த்வரிக்கை என்னுமிவையெல்லாம் நம்பக்கலில் அடியோடு வேண்டாவே? என்று பிறர் ஆக்ஷேபிக்க வருவர்கள். சைதந்ய கார்யமாக விளையுமவை நம்மால் தடுக்கவொண்ணாதவை அவையுங்கூட நம்மால் விளைவனவல்ல, "சேதநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண:" என்கிற வேதாந்த வாசிரியருக்தியால் இவ்வுண்மையும் திண்மைபெறும். ஸொத்தைப்பெற்று அனுபவித்து ஆநந்திக்க வேணுமென்கிற ஆவல் ஸ்வாமிக்கே உரியதாகவும் உலகிற் காண்கிறோமாதலால் இந்த நியாயமேயாகும் இங்கும். ஆனால் ஜீவாத்மாவாகிற இந்த ஸொத்து சைதந்யமாகிற கலமஷத்தோடும் கூடியிருக்கையாலே சிறிது தலையாட்டவும் வாலாட்டவும் பெறுகிறது. தன்னை நன்றாக வுணரும்போது தலைமடிந்து நிற்கிறது. நிலாத் தென்றல் சந்தனம் புஷ்பம் முதலியனவாக நாம் பிறக்கவில்லையே. பிறவாவிடினும் அவற்றின் தன்மையேயன்றோ நமக்கு உற்றது.

## ஸாரமகச் சொல்வது கேளீர்

சேதநன் தான் எம்பெருமானைப்பற்றுவதானது ஸ்வகதஸ்வீகாரமென்றும், எம்பெருமான் தானே சேதநனை வரிப்பதானது பரகத ஸ்வீகாரமென்றும் சொல்லப்படுகிறது. கீதா பாஷ்யத்

தில் எம்பெருமானார் தெரிவித்தருளின மஹார்த்தம் இது. அதில் எட்டாவது அத்யாயத்தில் பதினான்காவது சுலோகம்- "அநந்யசேதாஸ் ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யச:, தஸ்யாஹம் ஸுலப: பார்த்த! நித்யயுக்தஸ்ய யோகிந:" 'ஜ்ஞாநீ து ஆத்மைவ மேமதம்' என்று பகவான் தான் தனக்கு உயிர்நிலையாகக் கொண்டாடும் ஞானியானவன் தன்னை உபாஸிக்கவேண்டியபடியையும் பேறு பெறும் பரிசையும் இனி யருளிச்செய்கிறான் கண்ணபிரான் என்று அவதாரிகையிட்டு சுலோகத்தை வெகு அழகாக வியாக்கியானித்தருளியுள்ளார் ஸ்ரீபாஷ்யகாரர் இந்த சுலோகத்தின் கருத்து என்னவென்றால், அர்ஜுநா! எவன் இடைவிடாமல் எப்போதும் வேறொன்றிலும் நெஞ்சைச் செலுத்தாதவனாய் என்னையே ஸ்மரிக்கிறானோ, என்னோடு நித்யஸம்ச்லேஷத்தை விரும்பியிருக்கின்ற அந்த பக்தனுக்கு நான் ஸுலபன்—என்பதேயாம். இதில் (தஸ்யாஹம் ஸுலப:) அவனுக்கு நான் எளியன் என்கிற பகுதிக்கு பாஷ்யம் செய்தருளியிருக்கின்ற அழகை என்சொல்வோம்! அவ்விடத்து பாஷ்யபங்க்திகளின் பொருளாவது—என்னோடு எப்போதும் கூடியிருக்க வேணுமென்கிற விருப்பமுடையவனுக்கு அடையத் தகுந்தவன் நானே யாகிறேன், மிக எளிதாக அடையத்தகுந்தவனுமாகிறேன்நான்;(அதாவது) அவனுடைய பிரிவைப்பொறுக்க மாட்டாதவனாய் (அவனைப் பிரிந்து தரித்திருக்கமாட்டாதவனாய்) நானே அவனை வரிக்கிறேன்; என்னையடைவதற்கான உபாஸனத்தின் பரிபக்குவ நிலைமையையும் அகற்றற்ற இடையூறுகள் நீங்குதலையும் என்னிடத்தில் அதிகமான ப்ரீதி முதலியவைகளையும் நானே கொடுக்கிறேன். "நாயமாத்மா" ச்ருதியில் இவ்வர்த்தம் ப்ரஸித்தமாயிருப்பதோடு இந்த கீதையிலேயே மேலே பத்தாவது அத்தியாயத்தில் 10. 11 சுலோகங்களாலும் சொல்லப்படுகிறது—என்பதாம். ஸத்ஸம்பிரதாய ஸாரார்த்தம் இங்கே பொதிந்திருக்குமழகு காண்க

## கீதாபாஷ்ய ஸ்ரீ ஸூக்திவிவரணம்

மேலே பொருள் விவரிக்கப்பெற்ற கீதாபாஷ்ய மூல ஸ்ரீஸூக்தியில் ஒவ்வொரு வாக்கியமும் ஸாரமானதே. "அத்யர்த்தப்ரியத்வ வியோகம் அஸஹமாந: அஹமேவ தம் வ்ருணே" என்பது கீதா பாஷ்ய ஸூக்தி ஞானியான சேதநனைப் பிரிந்திருப்பதை எம்பெருமான் தான் பொறுத்திருக்க மாட்டாதவனாய்த் தானே அந்த சேதநனை வரிப்பதாகக் கூறுகின்றவிதுதான் பரகத ஸ்வீகாரமென்பது. "மத்ப்ராப்த்யநுகுணோபாஸந விபாகம் அஹமேவ ததாமீத்யர்த்த:" என்கிற அடுத்தவாக்கியமானது ஸ்வகத ஸ்வீகாரப் பற்றுசை நன்றாகக் கழிக்கிறது இத்தலையில் விளைவெல்லாம் எம்பெருமானுடைய க்ருஷிபலமாக விளைகின்றதேயன்றி இவன் தலையாலே விளைவித்துக்கொள்ளுமது ஒன்றுமில்லையென்கிற ஸத்ஸம்ப்ரதாயஸாரார்த்தம் எவ்வகையான சோத்யத்திற்கும் இடமில்லாதபடி தெளிவிக்கப்பட்டது இந்த இடத்தில் "நாயமாத்மா" ச்ருதியையும் எடுத்துக்காட்டி யருளுகிறார் ஸ்ரீபாஷ்யகாரர். பரகதஸ்வீகாரத்திற்கு அதுவே பிரமாணமென்று நிரூபிக்கிற முகத்தாலே பிறருடைய சில பல வாதங்களையும் அகற்றினதாயிற்று. இவ்விடத்தில்தாத்பர்ய சந்த்ரிகையில் வேதாந்தவாசிரியர் அருளிச் செய்துள்ள திவ்ய ஸூக்திகளும் தெள்ளியவே. "உக்தஸ்ய அதிவாதமாத்ரத்வ சங்காவ்யுதாஸாய ச்ருதிமூலதாமாஹ யமேவேதி" என்றருளிச் செய்திருப்பது ஆழ்ந்து நோக்கத்தக்கது.

## —நிகமனம்—

தேசிகன் விளக்கொளி யெம்பெருமானுக்கு இட்டருளின ஸ்துதிக்கு சரணாகதி தீபிகையென்று திருநாமம் சாற்றினதே ஒரு அற்புதம். அதில் "ஸ்வப்ராப்தயே தநுப்ருதாம் த்வரஸே முகுந்த!" என்றது அதற்கு மேல் அற்புதம். ஒருவனுடைய மனைவி பிறந்தகத்திலிருந்துகொண்டு கணவனை மறந்துகிடக்கிறாள். அவளுடைய பிரிவைப் பொறுக்ககில்லாத கணவன் துடிக்கிறான், பலபடிகளாலும் அவளுக்கு ஆர்த்தியை விளைவித்துத் தன்பக்கல் வந்து சேரும்படிக்கு விரைகின்றான், "இன்றுவிண்ணுலகம் தருவானாய் விரைகின்றான்" என்ற பாசுரத்தையுட்கொண்டபடி, எதற்காகஅவன் த்வரிக்கிறானென்று ஸ்வாமிதேசிகனைக்கேட்போம்.

# ஆழ்வார்கள் அருந்திய பஞ்சாமிருதம்

அம்ருதமென்பது தேவலோகத்திலுள்ளதென்றும் அது மானிடர்க்குக் கிடைக்கமட்டாததென்றும் பலர் நினைப்பதும் சொல்லுவதுமுண்டு ஆனால் நிச்சலும் அமுதமுண்டுகளிக்கின்ற நாம் அப்படி நினைப்பதற்கு ப்ரஸக்தியில்லை. உலகில் நூல்களைப் பாடினவர்கள் பல்லாயிரவரிருந்தாலும் "தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்று துணிந்து சொன்னவர் ப்ரபந்நஜநகூடஸ்தரான நம்மாழ்வார் ஒருவரே யன்றி மற்றொருமிலர். ஸ்ரீமந்நாதமுனிகளும் "பக்தாம்ருதம்விச்வஜநாநுமோதநம்" என்று மருமமறிந்து பேசும்படியானதன்றோ அவ்வமுதம். பிள்ளைப்பெருமாளையங்காரும் திருவரங்கக்கலம்பகத்தின் காப்புச் செய்யுள்களில்

> "மறைப்பாற்கடலைத் திருநாவின் மந்தரத்தாற் கடைந்து
> துறைப்பாற்படுத்தித் தமிழாயிரத்தின் சுவையமிழ்தம்
> கறைப்பாம் பணைப்பள்ளியா னன்பரீட்டங் களித்தருந்த
> நிறைப்பான் கழலன்றிச் சன்மவீடாய்க்கு நிழலில்லையே"

என்ற செய்யுளினால் நம்மாழ்வாரை அமுதமளித்த பெருவள்ளலாகவே பேசிப்போந்தார். எம்பெருமான் உப்புக் கடலைக் கடைந்து ப்ரயோஜநாந்தரபரர்களான அமரர்கட்கு அமுதமளித்தான், ஆழ்வாரோ வென்னில், வேதமாகிற பாற்கடலைக் கடைந்து அநந்ய ப்ரயோஜநர்களான அத்புத பக்தியுக்தர்கள் அநவரதம் அருந்திக் களிக்கும்படியான திவ்யாம்ருதத்தை யநுக்ரஹித்தருளினர் இவ்வம்ருத ப்ரவாஹத்தில் கண்ட பஞ்சாம்ருதத்தை ஈண்டெடுத்துக் காட்டுவோம்.

மாறன் பணித்த தமிழ் மறைக்கு ஆறங்கங் கூற வவதரித்த திருநாவீறுடைய பிரானான திருமங்கையாழ்வார் சிறிய திருமடலென்றும் பெரிய திருமடலென்றும் இரண்டு திவ்ய ப்ரபந்தங்களை யருளிச் செய்திருப்பது உலகறிய நின்றது இவற்றுள் முக்கியமான விஷயம் என்னவென்றால் மோக்ஷமென்கிறவொருபுருஷார்த்தம் கிடையவேகிடையாது; அஃதொன்றிருப்பதாகச் சொல்லுவார் அவிவேகிகளேயொழிய விவேகிகளல்லர்' அஃது உண்டு என்று கொண்டாலும் அது அநுபவ ரஸிகர்களுக்கு உத்தமமான புருஷார்த்தமென்று கொள்ளத் தகாததே' என்று அறுதியிடுவது இதில் தலையான விஷயமாகக் காண்கிறது. ஆஸ்திகர்களில் தலைவரான திருமங்கையாழ்வாரா இப்படியருளிச் செய்கிறாரென்று பலரும் அதிசயிக்கக்கூடும். ஒருநாளும் இப்படி யருளிச் செய்திருக்கமாட்டார் என்றும் சிலர் சொல்லக்கூடும். திருமடல்களின் தொடக்கத்திலேயே ஸுஸ்பஷ்டமாகக் காணுமிவ் விஷயத்தில் ஸந்தேஹமென்ன? இவ்வாழ்வார் நாஸ்திகரல்லர் ஆஸ்திகர்களில் அக்ரேஸரர் என்பதும் அசைக்க முடியாததே; தம்முடைய பதிகங்களுக்குப் பயன் கூறுமிடத்து "இம்மன்னு பாடல் வல்லார்க்கு இடமாகும் வானுலகே" "வெங்கதிர்ப் பரிதிவட்டத்தூடு போய் விளங்குவாரே" "ஒளி விசும் பாள்வர்தாமே" என்றிப்படி அடிக்கடி யருளிச் செய்து போருகின்றார் தம்முடைய; திவ்யஸூக்திகளை யோதுமவர்க்குத் திருநாட்டில் வாழ்ச்சியையே பலனாகக் கூறியுள்ள இவ்வாழ்வார் மோக்ஷமென்கிற புருஷார்த்தமே கிடையாதென்று ஸ்தாபித்து இரண்டு திவ்யப்ரபந்த மருளிச்செய்தாரென்னில், இதன் கருத்தை ஆராய வேண்டும் கேண்மின்

சாஸ்த்ரஜ்ஞர்கள் * ந ஹி நிந்தா ந்யாயமென்று ஒரு நியாயம் சொல்லுவர்கள். "ந ஹி நிந்தா நிந்த்யம் நிந்திதும் ப்ரவர்த்ததே. அபி து நிந்த்யாத் இதரம் ப்ரசம்ஸிதும்" என்பதே அந்த நியாய மாகும் விவேகிகள் ஒன்றை நிந்தித்தார்களாகில் அதற்கு நிந்தையில் நோக்கன்று புகழுநினைத்த வொன்றைப் புகழ்வதிலேயே நோக்கு-என்பது இந்த ந்யாயத்தின் போக்கு; இந்த

நீதியின்படி மஹான்கள் சிலவற்றை சிந்தித்தார்களாகில் சிந்தையிலே சிறிதும் தாற்பரியமின்றிக்கே, உத்தேச்யமானதொன்றின் புகழ்ச்சியிலேயே தாற்பரியமாகின்றமையை நிரம்பக்காணுகின்றோம். ப்ரக்ருதத்தில், மோக்ஷபுருஷார்த்தமென்பதொன்று கிடையாதென்றும் இருந்தாலும்அது அஸாரமென்றும் மோக்ஷசிந்தையாகக் கூறினவிதற்கு இந்தசிந்தையில் சிறிதும் நோக்கில்லை; மோக்ஷத்திற் காட்டிலும் மிகவும் உத்தேச்யமாக ஆழ்வார்தாம்கொண்ட திவ்ய தேசாநுபவமே மிகச் சீரியதென்று இதனைப் புகழ்வதொன்றிலேயே நோக்கெனக் கொள்ளத் தக்கதாம். இதனை ஆழ்வார் வெகு அழகாக அருளிச் செய்யும்படி காண்மின்:

சிறிய திருமடலில் மோக்ஷமுண்டென்பாரை அவிவேகிகளென்று கூறி வருமிடத்து "ஆராவமுதமங்கெய்தி, அதில் நின்றும் வாராதொழிவதொன்றுண்டே" என்கிறார். இதன் உட்கருத்து யாதெனில், ஆராவமுதம் உண்மையில் இந்த லீலாவிபூதியில் இருக்க அந்த நித்ய விபூதியில் அஃதிருப்பதாகவும். அங்குச் சென்றவர்கள் உண்மையான இவ்வுலகத்தாராவமுதத்தை யநுபவிக்க மறுபடியும் வரவேமாட்டார்களென்பதாகவும் சொல்லுவது பொருத்தமுடைத்தோ? ஆராவமுதமென்பது இங்குத் தானுள்ளது- என்னுமிதுவே திருமங்கை மன்னனுடைய திருவுள்ளம்.

தேன், வாழைப்பழம் முதலான ஐந்து வஸ்துக்களைச் சேர்த்துப் பஞ்சாமிருதமென்று சொல்லிப் புசிக்கின்றோம் நாம். ஆழ்வார்கள் கண்ட பஞ்சாமிருதம் கேளீர்; * சீரார் செந்நெற் கவரிவீசுஞ் செழுநீர்த் திருக்குடந்தையில் ஆராவமுதே! என்றும் *ஆராவமுதாயடியேனுவியகமே தித்திப்பாய் * என்றும் நம்மாழ்வாராலழைக்கப்பட்ட அமுதம். * கொண்டல்வண்ணன் கோவலனாய்வெண்ணெயுண்டவாயன் என்னுள்ளங்கவர்ந்தவன் அண்டர்கோனணியரங்கனென்னமுது * என்று திருப்பாணாழ்வார் கண்ட வமுதம் * அடியேன் மேவியமர்கின்ற வமுதே— திருவேங்கடத் தெம்பெருமானே! * என்று நம்மாழ்வார் திருவேங்கடத்திற் கண்ட வமுதம். *எனக்குத் தேனேபாலே கன்னலேயமுதே திருமாலிருஞ்சோலைக்கோனே * என்று நம்மாழ்வார் தாமே தெற்குத் திருமலையிற் கண்ட வமுதம் * மன்னு குறுங்குடியாய் வெள்ளறையாய் மதிள்சூழ் சோலைமலைக்கரசே! கண்ணபுரத்தமுதே! என்று திருக் கண்ணபுரத்திலே கண்ட வமுதம், ஆக இவ்வம்ருதங்கள் ஆழ்வார்களுடைய பஞ்சாம்ருதமாகும். இந்த அம்ருதாநுபவத்திற் காட்டிலுமா அந்தஅம்ருதாநுபவம் சிறந்தது?

க்ருஷ்ணயஜுர்வேதத்தில் ஆறுவது காண்டம் ஆரம்பிக்கும்போதே "கோ ஹி தத் வேத யத்யமுஷ்மிந் லோகே அஸ்திவா ந வேதி" என்று ஓதப்படுகிறது "பரலோகத்தில் இருக்கிறதோ இல்லையோ, யார்கண்டார்? என்கிறது; இதுவும் பரலோகத்திலில்லாமையைச் சொல்லுகிறதன்று; த்ருஷ்டபுருஷார்த்தமொன்றின் புகழ்ச்சியிலே நோக்காக இங்ஙனே ஓதிற்றென்று வியாக்கியானம் செய்கிறார்கள். வேதாந்த தேசிகனுடைய பரமத பங்கரஹஸ்யத்திலும் இது காணலாம் * இச்சுவை தவிர யான் போய் இந்திரலோகமாளுமச்சுவை பெறினும் வேண்டேன்; என்றும் * அண்டர்கோனணியரங்கன் என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே * என்றும் *ஸத்யம் சபே வாரணசைலநாத! வைகுண்ட வாஸேபி ந மேபிலாஷ" என்றும் ஆழ்வாராசாரியர்கள் சொல்லுவதுமாத்திரமன்றிக்கே ஸ்ரீராம திவ்யசரிதாம்ருதத்தின் சுவையறிந்த திருவடியும் "ஸ்நேஹோ மே பரமோ ராஜந்! த்வயிநித்யம் ப்ரதிஷ்டித:பக்திச்ச நியதா வீர! பாவோ நாந்யத்ர கச்சதி" என்னக் காணுகின்றோம். சொன்னதோடு மட்டுமல்லாமல் "ஸோத்ரைவ ஹந்த! ஹநுமாந் பரமாம் விமுக்திம் புத்த்யாவதூய சரிதம் தவஸேவதே ஸௌ. என்று ஆழ்வானருளிச் செய்தபடி இவ்விபூதியிலேயே யன்றோ திருவடி (ஹநுமான்) வசிப்பது.

# முக்தியின் தத்துவம்

"தத்வஜ்ஞாநாத் முக்தி அஜ்ஞாநாத் ஸம்ஸார:; என்பதொன்றுண்டு. இது பெரும்பாலும் ஸகல மதஸ்தர்களாலும் ஒப்புக்கொள்ளப்படுகிறது. ஆனால் இந்த வாக்யத்திற்குப் பொருள் சொல்லப்புகும்போது ஒருவர் சொல்லும் பொருளை மற்றொருவர் சொல்லுவதில்லை. தத்வஜ்ஞானமென்றால் என்ன? முக்தியென்றாலென்ன? என்னும் விசாரத்தில் பலபல மத பேதங்கள் தோன்றியுள்ளன. விசிஷ்டாத்வைத ஸித்தாந்த ரீதியில் தத்வஜ்ஞானமென்பது இன்னது, முக்தியென்பது இன்னது, என்று நம்மவர்கள் தெரிந்துகொள்ளவேண்டும். தத்வஜ்ஞானமென்பதுபற்றி மற்றொருகால் சொல்லுவோம்; ப்ரஸங்காத் இப்போது முக்தியைப் பற்றிச் சுருங்கச் சொல்லுகிறோம். 'பாஷாணகல்பதைவ முக்தி:' என்றும், 'ஆத்யந்திக து:க்கத்வம்ஸ ஏவமுக்தி:' என்றும் இப்படி பலவாறு பிறர் கூறுவர் நம்மைப்பிடித்த பீடைகளெல்லாம் விட்டுத் தொலைகைதான் மோக்ஷமென்பது பிறருடைய கொள்கையாகத்தேறுகின்றது.

ஒரு மஹாப்ரபு அத்வைத ஸம்ப்ரதாயத்தில் பரிபூர்ண ஜ்ஞானமுடைய தனது மந்த்ரியிடத்தில் 'மோக்ஷமாவது என்ன? என்பதை எனக்கு விளக்கமாகச் சொல்லவேணும்' என்று கேட்டாராம் அந்த மந்த்ரி 'இவருக்கு நாம் சாஸ்த்ரங்கொண்டு காட்டுவதைவிட அநுபவத்தையிட்டே காட்டி விடுவது நன்று' என்று நினைத்து ஒருபாயம் செய்தாராம். அதாவது, அந்த மஹாப்ரபு சயனக்ருஹத்தில் படுத்து உறங்கின பிறகு அந்த அறையை வெளியே பூட்டிக்கொண்டு அங்கேயே படுத்துக்கொண்டார்மந்த்ரி; மஹாப்ரபு மலஜலபாதையை விஸர்ஜனம் செய்யவேண்டியெழுந்து கதவைத்திறக்கப் பார்த்தபோது கதவு திறக்க முடியாமற் போகவே வெளியில் பூட்டப்பட்டிருப்பதையறிந்து கதறத தொடங்கினார். வெளியே கிடக்கிற மந்திரி தாம் ஒன்று மறியாதவர்போல. "கதவு பூட்டிக்கிடக்கிறதே, யார் பூட்டினார்களோ தெரியவில்லையே இதோ பார்க்கிறேன்" என்று சொல்லி மாயஞ்செய்திருந்தார். ப்ரபுவுக்கு தேஹபாதை பொறுக்க முடியாத நிலைமையாகிக் கூக்குரலிட்டு 'பூட்டு திறக்கத்திறவு கோல்கிடைக்கவில்லையென்றால் பூட்டை யுடைத்திடு; இனி என்னால் ஒரு நொடியும்பொறுத்திருக்கமுடியாது" என்று கத்த, மந்திரி உடனே கதவைத் திறந்துவிட்டார்; ப்ரபு உடனே வெளிவந்து மலஜலபாதையைக் கழித்துக்கொண்டு அப்பாடா! என்றாராம். அப்போது மந்திரி அருகே வந்து, ப்ரபோ! இதுதான் மோக்ஷமென்பது; இப்போது அப்பாடா! என்கிறீரே, என்ன ஸுகங்கண்டு இது சொன்னீர்! தேஹத்திலிருந்த பாதை தொலைந்ததிற் காட்டில் அபூர்வமான வொரு ஸுகம் வந்ததில்லையே; இருந்தபாதையின் நிவ்ருத்தியைத் தானேஸுகமாகக் கருதுகின்றீர்; இதுபோலவேபிறப்பிறப்பு மூப்புப்பிணித் துன்பங்களினின்று நாம் விடுபடுவதற்கு மேற்பட அபூர்வமாகஒரு ஸுகமும்வருவதன்று; ஆத்யந்திக துக்கத்வம்ஸமே மோக்ஷமென்று கொள்வீர்' என்றாராம். "பாஷாணகல்பதைவமுக்தி:" என்கிற நையாயிகாதிகளுக்கும் இதுவே கருத்தாகத் தேறும்.

நம்முடைய ஸித்தாந்தமோ வென்னில்; அபூர்வமாக வொரு மஹானந்த மநுபவிப்பதே மோக்ஷமென்பதாம், ஆளவந்தார் "கதாஹமைகாந்திக நித்ய கிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி" என்றருளிச் செய்தார் ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலாவடிமை செயது அநுபவிக்கிற ஆனந்தம் அவரவர்களுக்கு ஆத்மைக வேத்யம். "வேதமனைத்துக்கும் வித்தாகும் கோதை தமிழ் ஐயைந்துமைந்தும்" என்னப் பட்ட திருப்பாவையில் ஒருத்தி மகனாய்ப் பாசுரத்தில் வருத்தமுந் தீர்ந்து மகிழ்ந்தேலோ ரெம்பாவாய் என்றது உயிரான வார்த்தை; வருத்தம் தீர்ந்ததோடு நில்லாமல் மகிழ்ந்து என்னும்படியான வொரு நிலைமையுண்மை காட்டப்பட்டது, நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் (7-5-10) வார்த்தையறிபவர் என்ற பாட்டில்

போர்த்த பிறப்பொடு நோயொடு மூப்பொடு இறப்பிவை பேர்த்துப் பெருந்துன்பம் வேரற நீக்கி"என்றிவ்வளவு சொன்னதற்கும் மேற்பட "தன் தாளின் கீழ்ச் சேர்த்து அவன் செய்யுஞ் சேமத்தை யெண்ணி" என்றருளிச் செய்திருப்பது நோக்கத் தக்கது.

"ததா வித்வாந் புண்யபாபே விதூய நிரஞ்ஜந: பரமம் ஸாம்ய முபைதி" என்றும் 'ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி" என்றும் இந்த ஜீவாத்மா பரமாத்மாவோடு ஐக்யம் பெறுவதாக உபநிஷத்துக்களில் சொல்லியிருக்கையாலே இவன் தனியே நின்று கைங்கரியம் பண்ணிக்களிக்கை யென்பதற்கு அவகாசமேது? என்பர் பிறர். மேலே குறித்த ப்ரமாணங்களில் ஐக்கியம் சொல்லபபட்டிருக்கவில்லை, ※ ஸாம்யம் உபைதி※ என்று சொல்லப் பட்டிருக்கிறது ஸாம்யமாவது என்ன? ஐக்யமன்று "தத்பிந்நத்வே ஸதி தத்கத பூயோதர்மவத்த்வம் ஸாம்யம் உபமாயத்ர ஸாத்ருச்யலக்ஷ்மீருல்லஸதி த்வயோ: ※ என்கிற அலங்காரிகள் விஷ்ணுரேவ பூத்வா இமாந் லோகாந் அபிஜயதி' என்று தெளிவாகச் சொல்லுவர்கள் இரண்டு வஸ்துக்கள் தனிப்பட இருந்து தீரவேண்டும்; தன்மைகளில் பெரும்பாலு மொற்றுமையேயொழிய வஸ்துவில் ஐக்யமல்ல. 'சந்த்ரஸமம் முகம்' என்றால் சந்திரன் வேறாகவும் முகம் வேறாகவும் இருப்பதை ப்ரத்யக்ஷத்திற் காண்கிறோம் இப்படி பல த்ருஷ்டாந்தங்கள் பார்க்கலாம். ஆகவே பரமாத்மா வேறு தத்வமாகவும் ஜீவாத்மா வேறு தத்வமாகவும் இருந்தாலொழிய ※ ஸாம்ய முபைதி※ என்பது நிர்வஹியாது "ப்ரஹ்மைவ பவதி' என்றவிடத்திலுள்ள ஏவகாரத்திற்கு இவகாரத்தின் பொருள் கொள்ளவேணுமென்பதை வேதமே காட்டியிருக்கிறது எங்கே யென்னில் யஜுர்வேதம் இரண்டாவது காண்டம் முதல் ப்ரச்நத்தில் விஷ்ணுரேவ பூத்வா இமாந் லோகாந் அபிஜயதி என்றவிடத்தில் 'விஷ்ணுரேவ என்பதற்கு 'விஷ்ணுரிவ' (விஷ்ணுபோல) என்றேபொருள் கொள்ள வேண்டியிருப்பது' பிறர்க்கும் உடன்பாடு, ஏனெனில், மேலே இமாந் லோகாந் அபிஜயதி※ என்று சொல்லி யிருக்கையாலே,

ஸ்ரீஹர்ஷகவி இயற்றிய நைஷத காவியத்தில் இரண்டாவது ஸர்க்கத்தின் முதல் ச்லோகம் வெகு அற்புதமாக அமைந்திருக்கின்றது நளமஹாராஜன் ஒரு தடாகத்திற்குச் சென்று ஹம்ஸபக்ஷி யொன்றைப் பிடித்துக் கொண்டான் அது விடுபடுவதற்குப் பலவாறு முயன்றும் பயன்பெறவில்லை. அரசன் மனமிரங்குமாறு பலபேசி விடுபட்டது அதைச் சொல்லுகிறார் மஹாகவி ※ அதிகத்ய ஜகத்யதீச்வராத் ※ என்னும் (2–1) ச்லோகத்தினால், அதில் உத்தரார்த்தம்-※ 'வசஸாமபி கோசரோ ந யஸ் ஸ தமாநந்தமவிந்தத த்விஜ' என்பது விடுபட்ட அந்த ஹம்ஸபக்ஷியானது வாசாமகோசரமான மஹானந்தத்தை யடைந்ததாக இங்குச் சொல்லப்படுகிறது. இந்தச்லோகம் சிலேடையாகவும் அமைக்கப்பட்டிருக்கிறது. ஹம்ஸபக்ஷி விடுபட்டு இன்பமெய்தினது மாத்திரம் இங்குச் சொல்லப்பட்டிருக்கவில்லை. ஒரு வேதாந்தி முக்திபெற்றுப் பேரின்பம் நுகர்வதும் இங்கு சப்தஸந்நிவேச விசேஷங்களால் வெகு அழகாகக் காட்டப்பட்டிருக்கின்றது. 'விடுபட்டுப் பீடை தொலைந்தது' என்று இவ்வளவே சொல்லாமல் வாசாமகோசரமான ஆனந்தமடைந்தது என்றும் சொல்லியிருப்பது நல்ல தெளிவைப் பிறப்பிக்கவல்லது ※ முக்திர் மோக்ஷோ மஹாநந்த:※ என்றதும் காண்க.

கைங்கரியம் பண்ணுவதாவது வேலை செய்வது தானே; இது துக்கரூபமாக இருக்குமே யல்லது ஆனந்த ரூபமாக இருக்குமோவென்று சிலர் சங்கிக்கக்கூடும், வேட்டையாடச் சென்ற துஷ்யந்தமஹாராஜன் கண்வருடைய ஆச்ரமத்திலே புகுந்து அங்கே சகுந்தலையைக் கண்டான்; அவளிடத்து மஹத்தான மோஹங்கொண்டான். தான் மஹாப்ரபு என்னும் நிலையையும் மறந்து அவளுக்குக் கைங்கரியம் செய்யப் பார்க்கிறான்—※ ஸம்வீஜயாமி நளிநீதள தாளவ்ருந்தை;—

திருவால வட்டம் பணிமாறட்டுமா? என்கிறார் * அங்கே நிதாய கரபோரு யதாஸுகம் தே ஸம்வாஹயாமி சரணாவுத பத்மதாம்ரௌ— அம்மா! உனது செங்கமலத் திருவடிகளை என்மடி மீது இட்டுக்கொண்டு வருடட்டுமா? என்கிறான். இந்த கைங்கரியம் செய்வதற்குமேல் தனக்கு ஆனந்தமில்லையென்று நினைக்கிறானன்றோ? இதைத்தான் நம் ஆசாரியர்கள் (முமுக்ஷுப்படியில்) "சேஷத்வம் துக்கரூபமாகவன்றோ நாட்டில் காண்கிறதென்னில், அந்த நியமமில்லை; உகந்த விஷயத்துக்கு சேஷமாயிருக்கு மிருப்பு ஸுகமாகக் காண்கையாலே" என்ற திவ்ய ஸூக்தியினால் வெளியிட்டருளினர். வேதார்த்தஸங்க்ரஹத்தின் முடிவிலும் இதைக் காண்க. ... ...*

# ஸ்ரீ ரங்கநாத பாதுகாபர்யவேக்ஷணம்

இந்த மகுடத்தைக் காணும்போதே "இவன் ஏதோ அதிகப்ரஸங்கம் பண்ணத் தொடங்குகிறான்" என்று சிலர் நினைக்கக்கூடும் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஆண்டவனும் இங்ஙனே திருவுள்ளம் பற்றக்கூடும். ஒருவரும் மருளவேண்டா. "ஸத்யம் சபே" என்ற கணக்கிலே விஜ்ஞாபிக்கிறேன். அடியேன் தென்கலைபார் வடகலையார் என்கிற வாசி பாராமல் வித்யாநிதிகளாயுள்ளவர்கள் பக்கலில் பரமப்ரேமஸம்பத்து நிரம்பியவன். "குணதோஷௌ புதோ க்ருஹ்ணந் இந்துக்ஷ்வேளாவிவேச்வர:, சிரஸா ச்லாகதே பூர்வம் பரம் கண்டே நியச்சதி" என்கிற சுலோகத்தைத் திருத்தகப்பனார் பக்கலிலே பதின்மூன்றாவது பிராயத்திலே குவலயாநந்தத்தில் வாசித்தேன் ஆனால் "பரம் கண்டே நியச்சதி" என்றதை மட்டும் பரிபாலிக்க பாக்யமற்றவனாய் விட்டேன். அடியேனெடுத்துக் காட்டும் குற்றங்குறைகளை நூற்றுவர்கூடி நிரஸிக்க நினைத்தாலும் நிரஸிக்கமுடியாதென்பதை ஆத்ம ப்ரசம்ஸையானாலும் விஜ்ஞாபியாமலிருக்க முடியவில்லை. பிறர்களால் எளிதாகக் கண்டிக்கக் கூடிய விஷயங்களை நான் ப்ரஸ்தாவிப்பதுமில்லை.

"தே ஹி நோ திவஸா கதா." என்று சக்ரவர்த்தி திருமகன் சொல்லி நிர்வேதப்படுவதாக பவபூதி மஹாகவி எழுதிவைத்தான். அந்த நிர்வேதம் அடியேனுக்கு உண்மையாகவுண்டு. இதை அழுதுகொண்டே எழுதுகிறேன். எதை? "தே ஹி நோ திவஸா கதா." என்பதை. நினைவுக்கு வருவதையெல்லாம் உபேக்ஷிக்கவில்லாமல் ஸ்ரீமதாண்டவன் திருவடிவாரத்திலே விஜ்ஞாபிக்கிறேன். உண்மையில் அடியேன்பால் ஆர்ஜவம் பொருந்திய திருவுள்ளமுடையவர் ஸ்ரீஸ்வாமியொருவரேயென்பது எனதுநம்பிக்கை. அதனால் விஜ்ஞாபித்தபடி,

எனது வித்யார்த்தி தசையில் (அதாவது இருபது பிராயத்தில்) வடநாட்டில் ஏழெட்டு ஸம்ஸ்க்ருத பத்ரிகைகள் நடந்து கொண்டிருந்தன. ஸம்ஸ்க்ருதசந்த்ரிகா, ஸூந்ருதவாதிநீ, மித்ரகோஷ்டீ, விஜ்ஞாநசிந்தாமணி, விசக்ஷணா [ ... ஸஹ்ருதயா] இத்யாதி (வடமொழி) பத்திரிகைகள் மாதம் தவறாமல் வெளிவந்து கொண்டிருந்தன அஸ்மதாசார்ய பாதரான ஸ்ரீ ஜகத்குரு காதிஸ்வாமிஸன்னிதியில் இவை யெல்லாம் நியதமாக வந்து கொண்டிருக்கும். பூனா ஸமீபத்தில் வாயீ என்பதொரு க்ஷேத்ரம்; அவ்விடத்தில் அப்பாசர்ம வித்யாவாசஸ்பதியென்பவர் மஹாராஷ்ட்ர பண்டிதர். அவரை வெறும் பண்டிதரென்று சொல்லலாகாது. ப்ரபலபண்டிதர். வியாகரணத்திலும் அலங்காரசாஸ்த்ரத்திலும் மஹாநிபுணர். அநவத்ய ஹ்ருத்யலேகனத்தில் கைதேர்ந்தவர். அவர்ஸம்ஸ்க்ருத சந்த்ரிகா என்கிற மாதப்பத்திரிகையையும் ஸூந்ருத வாதிநீ என்கிற வாரப்பத்திரிகையையும் நெடுநாள் நடத்திவந்தார். விஜ்ஞாநசிந்தாமணியென்கிறபத்ரிகை கேரள தேசத்தில் பட்டாம்பியென்கிற ஊரிலிருந்து மாதப்பத்திரிகையாகவும்

வாரப் பத்ரிகையாகவும் பலவாண்டுகள் நடந்து வந்தது. அதன் ஸம்பாதகரான புன்னச்சேரி நீலகண்ட சர்மா என்பவர் நித்ய ப்ரம்மசாரி. அவரும் ப்ரபல பண்டிதர். அவரோடு நேரில் பழக்கமுண்டெனக்கு. மிக வியக்கத்தக்க ஞான முடையவர். விசக்ஷணா என்கிற பத்ரிகையை (மாதந் தோறும்) நடத்தி வந்தவர் கீர்த்திமூர்த்தியான ஸ்ரீமதுபயவே சிறுபுலியூர் அண்ணன் ஸ்வாமியின் இளைய திருக்குமாரரான ஸ்ரீ தொட்டயாசாரியர் ஸ்வாமி இவர் ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில் சாஸ்த்ரங்கள் அதிகரித்துச் சிறந்த ஆலங்காரிகராயும் மஹாகவி யாயும் விளங்கி ஸ்ரீபெரும்பூதூரிலிருந்து கொண்டே விசக்ஷணா பத்ரிகையை மூன்று நான்கு வருஷகாலம் நடத்தி வந்தார் [இவர் பால்யத்திலேயே மறைந்தது சோசநீயம்.]

கீழே தெரிவிக்க பத்திரிகைகள் அடியேனுடைய வித்யார்த்தி தசையில் மிகப்பொலிவு பெற்றிருந்தன இதைநான் இங்கு இப்போது எதற்காகப்ரஸ்தாவிக்கிறேனென்றால் அப்பத்திரி கைகளில் அவத்யமென்பது தேடிப்பிடிக்கவும் முடியாமலிருந்தது அவற்றில் ஸம்பாதகர் மட்டுமன்றிக்கே இதர வித்வான்களும் பலர் லேகங்கள் எழுதி வந்தார்கள்; அவர்கள் பிழைபட எழுதியனுப்பியிருந்தாலும் ஸம்பாதகர்கள் திருத்தியே வெளியிட்டு வந்தார்கள். அப்படியிருந் தும் சில பிழைகள் காண நேரும் கண்டதும் நான் கூசாமல் அப்பிழைகளைத் தெரிவிப்பேன்; ஸம்பாதகர் சிறிதும் வெறுப்புக் கொள்ளாமல் ஸந்தோஷமுங்கொண்டு என்னுடைய லேகங்களை யும் வெளியிடுவர். இதெல்லாம் ஆத்மப்ரசம்ஸையாகப் பொய் எழுதிக்கொள்வதன்று; ஸுரக்ஷிதங்களாயுள்ள அந்தப் பத்திரிகைகளை ஸமயேப்ராப்தே ஸபைகளில் காட்டவுங் கடவேன். இத்தகைய விஷயங்களையும் நெஞ்சிற்கொண்டே "தேஹி நோதிவஸா கதா:" என்று எடுத்துக்காட்டினேன் அக்காலத்தவர்கள் இப்போது ஒருவர் கூட இல்லையேயென்கிற வருத்தமுமெனக்குண்டு. அதெல்லாம் ஸம்ஸ்க்ருத பத்திரிகைகளைப்பற்றின விஷயம். இப்போது ப்ரஸங்கிப்பது தமிழ்ப்பத்திரிகை விஷயம் "ஏகச்சப்தஸ் ஸம்யக் ஜ்ஞாதஸ் ஸுஷ்டு ப்ரயுக்தஸ் ஸ்வர்க்கே லோகே காமதுக் பவதி" என்பது வடமொழியைப் பற்றி மட்டுமன்றே. தமிழானாலும் யதேஷ்டமாக எழுதி விடலாமோ? எந்த பாஷைக்கும் இலக்கணமுண்டே. "அஸ்மாகூணாம் தார்க்கிகேஷாம் அர்த்தரேயவ, நது சப்தரி" —"அஸ்மாகூணமிதி கதம்?—இக்ஷ்வாகூணமிதி யதம் ததமேவ,: இத்யாதி விநோத ஸம்வாதங்கள் பல நினைவுக்கு வருகின்றன. இவற்றை விட்டிட்டு ப்ரக்ருத விஷயத்திற்குச் செல்லுகிறேன். "நீ ஏதோ எழுகலாமே யொழிய அச்செழுத்துக்களையோ கையெழுத்துக்களையோ வாசிக்கக் கூடாது" என்று கண் டாக்டர் எனக்குக் கடுமையாகக் கட்டளையிட்டிருக்கச் செய்தேயும் அதைமீறிச் சில ஸமயம் சிலவற்றை (சாபலத்தினால்) வாசிக்க நேர்ந்து விடுகிறது. அவசிய மானவற்றைப் பெரும்பாலும் அன்பர்கள் வாசித்துக் காட்டியே தெரிந்து கொள்ளலாகிறது. ஸ்ரீ ரங்கநாத பாதுகா பத்ரிகையில் "ஸ்ரீ மத் ஆண்டவன் அமுத மொழி" என்னும் தலைப்பில் வெளி வரும் வியாஸம் ஸ்ரீமதாண்டவனுடைய நிஜ ஸ்ரீ ஸூக்திகளாதலால் சென்ற புரட்டாசி மாதத்திதழில் முதன் முதலாகக் காண நேர்ந்த போது ஆவல் மிகுதியினால் சிறு பான்மை நேராக வாசித்தும் பெரும்பாலும் பிறர் வாசிக்கக்கேட்டும் மிகமிகரஸித்துக் களித்தேன். விஷயோபபாதனங்களில்; தத்ராபி ஸ்ரீ ஹயக்ரீவ மூர்த்தியான ஸ்ரீமதாண்டவனுடைய சதுரச்ரமான உபபாதனங்களில் நீசனேன் நிறையொன்று மிலேன் பிதற்ற என்ன இருக்கிறது! அடியேனுக்குப் பலவற்றில் அஜ்ஞானமிருந்தாலும் ஸ்வாஜ்ஞானத்தில் அஜ்ஞானமில்லையென்பதை உண்மையாக விஜ்ஞாபித்துக் கொள்கிறேன். ஆகவே ஸ்ரீஸ்வாமி எழுதியருளும் விஷயங்களை நெஞ்சுருகிக் கண்பனிப்ப அநுபவிக்கும் பாக்கிய முடையேனத்தனையல்லது மற்றொன்றுக்கு ப்ரஸக்தியில்லை. சீர்ஷிகையின் கீழ்ச் சிறிது பெரிய எழுத்திலேயே "ஐம்பத்தியோரு பொருள்" என்றிருப்பதை முன்னமே கண்டு ஸ்ரீமதாண்டவன் ஸன்னிதிக்கும் நிர்வாஹகர்களுக்கும் ப்ரார்த்தநாரூபமான விண்ணப்பம் விடுத்திருந்தேன்;

"ஐம்பத்தியோரு" என்பது ஸர்வாத்மநா பொருந்தாது; 'ஐம்பத்தொரு' என்று இருக்கவேணும்." என்று விஜ்ஞாபித்திருந்தேன். [இஃது இரண்டு மாதங்களுக்கு முந்தி] இக்கார்த்திகை யிதழிலும் "ஐம்பத்தியோரு பொருள்" என்றே மகுடவிந்யாஸம் காண்கிறது. மேலே "சென்ற புரட்டாசி" யென்கிற முதல்வரியில் அடியேனுடைய உத்போதகவிஜ்ஞாபனம் கிடைத்தமையும் காட்டப்பட்டிருக்கிறது. அதுகிடக்க அடுத்தவாக்கியம் 'பதிமூன்று பொருள்கள்' என்றுள்ளது. ஸ்ரீமதாண்டவன் தமது திருக்கையால் எழுதியருளாமல் மஹாஸதஸ்ஸில் உபந்யஸித்தருளின வற்றை அந்தேவாஸிகள் ஏடுபடுத்தினபடியாயிருக்குமத்தனை மேலே பக்கம் 330ல் "ஸ்ரீவிஷ்ணு புராணம்—பதிமூன்றுவது அத்யாயம்" என்று பெரியஎழுத்திலுள்ளது. பெண்கள்கூட இப்படி யெழுதமாட்டார்களே

ஆனால், "மயிட்டியென்றுதான் எழுதவேணும், மண்வெட்டி யென்றெழுதக்கூடாது; அமிசேஞ்சார் என்றுதான் எழுதவேணும், அமுதுசெய்தார்என்றெழுதக்கூடாது; உட்கார்ந்தார் என்றெழுதக் கூடாது, ஒக்காண்டார் என்றேயெழுதவேணும், உச்சாரணமும் எழுத்தும் மாறுபடக்கூடாது" ஒன்று என்றெழுதாமல் ஒண்ணு என்றுதானெழுத வேணும் இரண்டு என்றெழுதாமல் றெண்டு என்றுதானெழுத வேணும்; றெங்கு–ருமு என்றேயெழுதவேணும்; என்றிப்படி சிக்ஷிப்பவர்களுமுளர் அன்னவர்களின் நிர்வாஹத்தில் பாதுகா பத்ரிகை பிரசுரமாவதாயிருந்தால் அஞ்ஜலியே தஞ்சமாகும் நமக்கு.

ஸ்ரீமதுபயவே. வித்வான், மதுராந்தகம் வீரராகவாசாரியர் ஸ்வாமி அடியேனுக்கு இளமை தொடங்கியே பரமஸ்நிக்தர். உண்மையில் பரமஸாத்விகர். ஆனால், அவர் தாம் தலையிடத்தகாத விஷயங்களில் தலையிட்டு அடியேனுக்கு வீண்பரிச்ரமம் தந்தருளுகிறார். இது வரையில் ஸ்ரீ ராமாநுஜன் மூலமாகவும் தனிப் புத்தகமாகவும் அந்த ஸ்வாமியை நோக்கி அடியேன் வெளியிட்டவை எண்ணிறந்தவை யென்பதை உலகமறியும். மதுராந்தக ஸ்வாமி மஸ்தகாபரணம் என்றும், சிரோபூஷா என்றும் பலபல பெயர்களிட்டு அடியேன் வெளியிட்டவை திருமுடிக்கு ஆபரணமாயும் பூஷணமாயும் இருந்துவருகின்றனவே யன்றி அடியேனுடைய ஆகாங்க்ஷைகளுக்கு சாமகமாக ஓரக்ஷரமும் அருள மாட்டேனென்கிறார். இனிமேல் அந்த ஸ்வாமியோடு பிணங்குவதை அறவே நிறுத்திக்கொள்வதாக ஸங்கல்பித்து, கடைசியாக இந்த விண்ணப்பம் வரைகின்றேன். இப்போது ப்ரஸ்தாவித்து வருகின்ற ஸ்ரீரங்கநாதபாதுகா ஸஞ்சிகையில் (கார்த்திக தீபம்) என்றொரு கட்டுரையை வெளியிட்டுள்ளார். இதிலுள்ள எண்ணிறந்த அச்சுப் பிழைகளில் இறையும் கண் செலுத்துகின்றிலேன். கட்டுரையின் முடிவில் (லலிதா சரிதத்திலே) என்று தொடங்கியுள்ளதைப் பற்றிக் கேண்மின். லலிதாவுக்கு லளிதா என்றும் ஒரு பெயர் உண்டு போலும் மணற்சோற்றில் கல் ஆராய்வதை விட்டிடுவோம். விட்டிட்டோம்.

ஸ்ரீவசனபூஷணம் நான்காம் ப்ரகரணத்தில் "த்ரிபாத் விபூதியிலே" இத்யாதி ப்ரதம சூர்ணைக்கு அடுத்தபடி "லலிதா சரிதாதிகளிலே இவ்வர்த்தம் சுருக்கமொழியக் காணலாம்" என்கிற சூர்ணையின் வியாக்கியானத்திலே மணவாளமாமுனிகள் அருளிச் செய்துள்ள ஸ்ரீஸூக்திகளை இவர் ரஸாபாஸமாக்கித் தன் வாக்கியமாக வரைந்துள்ளார் மாதுர்யமே வடிவெடுத்த மாமுனிகளின் ஸ்ரீஸூக்திமாலைகளை ஒரு பத்தியிலும், இவருடைய வாக்கியங்களை ஒரு பத்தியிலுமாகக்கோடிட்டு ஈண்டெடுத்து எழுதுகிறேன், ரஸிகர்கள் இரண்டையும் வாசிக்க.

## மணவாளமாமுனிகளின் வியாக்கியான பங்க்திகள்

அதாவது—விதர்ப்பராஜஸுதையாய் காசிராஜ மஹிஷியான லலிதை ஸபத்நிகளானமுந்நூறு ஸ்த்ரீகளிலுங் காட்டில் ஆபிரூப்யம் அதிவச்ய பர்த்ருமக்தை தேஹதேஜஸ்ஸு ஸர்வகுண ஸம்பந்நதை இவையுடையளாய் அஹோராத்ர விபாகமற பகவத் ஸந்நிதியிலே அநேகந் திருவிளக்கேற்றி அதிலேநிரதையாய்ப் போருகிறபடியைக் கண்டு. "உனக் கிவ்வாபிரூப்யாதிகளுக்கும் தீபாரோபண கைங்கர்ய ப்ராவண்யத்துக்குங் காரணமென்" என்று ஸபத்நிகள் கேட்க, அவள் ஜாதிஸ்மரத்வயோடே பிறந்தவளாகையலே, *ததேஷா கதயாம் யோகத் யத்வ்ருத்தம் மம சோபநா: என்று தொடங்கி, *ஸௌவீர ராஜஸ்ய புரா மைத்ரேயோபூத் புரோஹித:, தேந சாயதநம் விஷ்ணோ: காரிதம் தேவிகாதடே, அஹந்யஹநிசுச்ரூஷாம் புஷ்பதூபாம்புலேபநை: தீபதாநாதிபிச்சைவசக்ரே தத்ரவ ஸந்த்விஜ " என்று ஸௌவீரராஜ புரோஹிதனை மைத்ரேயன் தேவியாற்றங்கரையிலே ஓரெம்பெருமான் கோயிலையுண்டாக்கி, அங்கே நாள்தோறும் ஸகல கைங்கர்யங்களையும் பண்ணிவர்த்தித்தபடியையும் *கார்த்திகே தீபகோ தீப உபாத்தஸ் தேநசைகதா, அஸீந் நிர்வாண பூயிஷ்டோ தேவஸ்ய புரதோ நிசி, தேவதாயதநே சாஸம் தத்ராஹமபி மூஷிகா, ப்ரதீபவர்த்திக்ரஹணே க்ருதபுத்திர் வராநநா, க்ருஹீதாச மயா வர்த்தி ப்ருஷதம்சேந ராவச, நஷ்டா சாஹம் ததஸ்தஸ்ய மார்ஜாலஸ்ய பயாதுரா, வக்த்ர ப்ராந்தேந சயந்த்யா ஸதீப ப்ரேரிதோ மயா, ஜஜ்வால பூர்வவத் தீப்த்யா தஸ்மிந்நாயதநே புந:" என்று, கார்த்திக மாஸத்திலே அவனந்த எம்பெருமான் ஸந்நிதியிலேற்றின அத் திருவிளக்கு அவியத்தேடுகிற வளவிலே யொரு பெண்ணெலியாய்க்கொண்டு வர்த்திக்கிறதான் அத்திருவிளக்கில் திரியைக் கவ்விக்கொண்டு போவதாக நினைத்துச் சென்ற அவ்வளவிலே ஒரு பூனை கத்தினகுரலைக் கேட்டஞ்சி மரணத்தையடையாநிற்க அப்போது பயத்தாலே நடுங்குகிற தன் மூஞ்சியாலே அந்தத் திரி தூண்டப்பட்டு முன்புபோல அத்திருவிளக்குப் பளபளத்தெரிந்த படியையும்; *ம்ருதா சாஹம் ததோ ஜாதா. பரா குலே என்று அநந்தரம் தான்மரித்து விதர்ப்பராஜனுக்குப் புத்ரியாய் ஜாதி ஸ்ம்ருத்யாதிகளோடே பிறந்தபடியையும்; "ஏஷப்ரபாவோ தீபஸ்ய ததோஜாதிஸ்ம்ருதிர் ஜந்ம தீபதாயிநாம்*என்று அந்த அஜ்ஞாதஸுக்ருதபலமாக தனக்கிந்தவேற்றங்களெல்லா முண்டானபடியையும் சொன்னாளென்று, ஸ்ரீ விஷ்ணு தர்மத்திலே லலிதாசரிதம் விஸ்தரேண சொல்லப்பட்டதிறே."

## மதுராந்தகரின் பங்க்திகள்

"அதாவது விதர்பராஜனுடைய பெண்ணும் காசீராஜனுடைய மஹிஷியுமான லளிதை என்பவள் அஹோராத்ரமும் பகவத்ஸந்நிதியில் திருவிளக்குகளையேற்றி இக்கைங்கர்யத்திலே ஈடுபட்டிருந்தாள் அவளுடைய ஸபத்நிகள் முன்னூறு பேர்கள் அழகிலும் பர்தாவின் அபிமாநத்திலும் அவர்களில் விஞ்சியிருந்தாளிவ் வுத்தமியிதைக்கண்டு அவர்கள் "உனக்கு இவை அமைந்ததுக்குக் காரணமென்ன" என்று கேட்க அவள் பூர்வஜாதி விருத்தாந்தத்தை அவர்களுக்குச் சொன்னாள், அவள் சொன்னதாவது — "ஸௌவீரராஜனுடைய புரோஹிதன் மைத்ரேயன் தேவியாற்றங்கரையிலே ஒரு ஸந்நிதி எம்பெருமானுக்கு ஏற்படுத்தி கைங்கர்யம்செய்து வந்தார். கார்த்திகை மாஸத்திலே அவர் அந்த எம்பெருமான் ஸந்நிதியில் ஏற்றிய திருவிளக்கு அவியத் தொடங்கியது அந்தக் கோவிலிலேயே ஒரு பெண் எலியாய் வசித்துவந்தேன் நான். அந்த திருவிளக்கின் திரியைக் கவ்விக் கொள்வதற்காக ஆரம்பித்தேன். ஒரு பூனை கத்தியதைக்கேட்டு அங்கே அப்போதே நடுங்கினேன் என் மூகத்திலே அந்த திரி தூண்டப்பட்டது திருவிளக்கு முன்புபோலே பிரகாசிக்க ஆரம்பித்தது நான் மரித்துவிட்டேன் அந்த ஸுக்ருதம் திருலேதான் நான் இந்த ஜன்மத்திலே ராஜகுமாரியாய் பிறந்து ராஜமஹிஷியாகி அரசனும் நீங்களும் அபிமாநிக்கும்படி பகவத்ஸந்நிதியில் தீபகைங்கர்யம் முதலானதில் அபிருசியுடையளாய் வாழ்கின்றேன் என்றாள் லளிதை."

இனி நாம் என்ன எழுதவேண்டும். மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளை வேற்றுருவமாக்கி யிருக்கும் விகாரத்தைக் கண்டீர்களா? 'ஸ்ரீவசநபூஷண வியாக்கியானத்தில் மாமுனிகள் விஸ்தரித்து அருளிச் செய்தவற்றைச் சுருக்கி யெழுதுகிறேன்—என்றெழுதி ப்ராமாணிகத்வபரிபாலனம் பண்ணலாகாதா? தத்வத்ரயவியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள் தேசிகனுடைய ரஹஸ்யத்ரய ஸாரத்திலிருந்து பஹுளமான பங்க்திகளை மூன்றிடங்களில் விரிவாக உதாஹரித்தருளியுள்ளார்; அவ்விடங்களை யெடுத்துப் பார்க்கட்டுமிவர். இன்சுவை மிக்க ஓர் பழைய கதையை நினைவூட்டுகிறோமிங்கு. ஜகத்விக்யாதரான ஸ்ரீ உவே. V. V ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமியை அறியாதாரில்லை. நினையாதாருமில்லை. அவர் பிரபல அட்வொகேட்டாக இருந்து இடையில் மூன்று நான்கு வருஷங்கள் ஹைகோர்ட்டு ஜட்ஜ பதவியை வஹித்துத் தாமாகவே விச்ராந்தராகி வெகுகாலமெழுந்தருளி யிருந்தார். அவரைப் பற்றி ஒரு பத்ரிகையில் ப்ரஸ்தாவித்த ஒருவர் "முந்நாள் ஜட்ஜ வி வி. ஸ்ரீநிவாஸய்யங்காரவர்கள்..." என்றெழுதி யிருந்தார். இவ்வூர் ஸன்னிதி வீதியில் ஆரணி ஜாகீர்தார் மாளிகையில் அந்த ஸ்வாமியின் அக்ராஸனத்தில் ஒரு மஹாஸபை நடந்து கொண்டிருக்கிறது அப்போ தங்கு நூறு ஸ்வாமிகள் குழுமியிருக்கிறார்கள். அந்தக் குழுவில் நானுமிருக்கிறேன். மேலே ப்ரஸ்தாவித்த பத்ரிகை அப்போது அங்கு வந்து சேர்ந்தது. முன்னம் வி. வி, ஸ்ரீஸ்வாமி கடாக்ஷித்தார் பிறகு அடியேன் பார்த்தேன். பலர் பார்க்கவேண்டிய செய்தியொன்று அதிலிருந்தபடியால் மற்றும் பலரும் பார்த்தார்கள். பிறகு அங்கேயே அடியேன் வி வி. ஸ்வாமியை நோக்கி விஜ்ஞாபித்தேன்—"தேவரீர் பலவாண்டுகள் ஜட்ஜ பதவியை வஹித்திருக்க மூன்று நாள் மட்டுமே ஜட்ஜ் பதவியிலிருந்ததாக இவர் எழுதியிருக்கிறாரே!" என்றேன். அப்படியிருப்பதாக என் கண்ணில் தென்படவில்லையே—என்றார் மறுபடி கடாக்ஷிக்கவேணுமென்று பத்ரிகையைக் கையில் கொடுத்தேன். பார்த்துவிட்டு 'அது காணவில்லையே?' என்றார். 'முன்னாள் ஜட்ஜ்' என்றெழுதவேண்டி யிருக்க. (முந்நாள் ஜட்ஜ்) என்றெழுதி யிருந்தது கொண்டு சொன்னேன்—என்று அடியேன் விவரிக்கக்கேட்ட அந்த ஸ்வாமி மிக்க மகிழ்ச்சி கொண்டு ஸபையில் பலபலவும் பேசிக் கரகோஷங்களை அபரிமிதமாக விளைத்தார். இது நடந்து முப்பத்தைந்து வருஷங்களுக்கு மேலாகிறது. மதுராந்தக நண்பரின் கட்டுரை இன்று இதை நினைவூட்டியது. இவர் எந்த ஸ்ரீஸூக்திகளைக் கொண்டு லலிதாசரிதத்தை யறிந்தாரோ அந்த ஸ்ரீஸூக்திச்ரேணியில் (முந்நூறு) என்று ஸ்பஷ்டமாக இருந்தும் தாம் (முன்னூறு) என்றெழுதுகிறார். இதையெல்லாம் அச்சுப்பிழை யென்ன முடியாது, ஹல்லுப் பிழையேயாம். "அப்திர் லங்கித ஏவ வாநரபடை:, கிந்த்வஸ்ய கம்பீரதாம் ஆபாதாலநிமக்நபீவரதநுர் ஜாநாதி மந்தாசல".

"ஓம் சாந்திச் சாந்திச் சாந்தி."

## நிச்சலும் சிந்திக்கவேண்டியதோர் ஆழ்வான் பெருமை

பெரிய திருமொழி வியாக்கியானத்தில (8-1-1) *சிலையிலங்கு பொன்னாழி ப்ரவேசத்தில் ஆழ்வான் பெருமை விளங்க அருளிச்செய்ததோர் ஐதிஹ்யம்:—

"ராஜேந்த்ர சோழனிலே ஒரு ப்ராஹ்மணன் மகன் புத்தரோடே ஸம்ப்ரதாய முண்டாய் பூணுநூலையும் குடுமியையும் அறுத்துப் பொகட்டான், கூரத்தாழ்வான் அங்கேற நடந்தவளவிலே அவன் சிகாயஜ்ஞோபவீதங்களைத் தரித்துக்கொண்டு வந்து புகுந்தான். அவனைக் கண்ட பிதாவானவன் 'கூரத்தாழ்வானைச் சந்தித்தாயோ?' என்று கேட்டான்,

புறம்புள்ளார் நீ இது அறிந்தபடி எங்ஙனே? என்று கேட்க, 'ஆழ்வான் ஸன்னிதியிலே தமோபிபூதரும் ஸத்வஸ்தராவர்கள் காண்' என்றான்" என்பதாக.

இங்கு மூலத்தில் பரகாலநாயகியின் திருத்தாயார் தம் மகளின் செய்லையைச் சிலரைநோக்கிச் சொல்லாநின்றுகொண்டு 'என்மகள் இத்தனைநாளும் போலல்லாமல் இன்று விலக்ஷணமாகப் பேசுகின்றாள், சிலையிலங்கு பொன்னாழி யென்கிறாள். திண்படை தண்டு ஒண்சங்கமென்கிறாள், மலையிலங்கு தோள் நான்கே யென்கிறாள், இந்த வைகரியை நோக்குமிடத்து இவள் திருக்கண்ணபுரம் சௌரிப் பெருமாளை ஸேவித்தவளாயிருக்கவேணும்' என்பதாகப் பாசுரம் அமைந்துள்ளது. இதற்குச் சார்பாகப் பெரியவாச்சான்பிள்ளைக்கு ஆழ்வானுடைய இதிஹாஸமொன்று நினைவுக்கு வந்தது அற்புதம்! மிகவற்புதம்!!

மேலே உதாஹரித்த வியாக்கியான ஸ்ரீஸூக்தியின் கருத்தை விளக்குவோம். ராஜேந்த்ரசோழனென்னுமூரிலே ஒரு ப்ராஹ்மணன்மகன் துஸ்ஸஹவாஸத்தாலே மதிகெட்டு சிகாயஜ்ஞோபவீதங்களை அறுத்தெறிந்து தந்தை சொற்கேளாமல் வ்ராத்யனாய்த் திரிந்து கொண்டிருந்தான், இப்படியிருக்கையில் ஒருநாள் அவ்வூர்க்குக் கூரத்தாழ்வான் யாத்ருச்சிகமாக எழுந்தருளினார் அந்த ப்ராஹ்மண குமாரனுக்கு ஆழ்வான் ஏதாவது ஹிதோபதேசம் செய்தருளினாரோ இல்லையோ தெரியாது, ஆழ்வான் அவ்வூர்க்கு எழுந்தருளினவளவே தெரியும். அவன் அப்போதே முன்போல் ப்ராஹ்மண லக்ஷணங்களுடன் கண்ணுக்கினியனாய் வீட்டுக்கு வந்து சேர்ந்தான். அன்னவனைக் கண்ட தகப்பனார் 'பிள்ளாய்! கூரத்தாழ்வானோடு சந்திக்கப்பெற்றாயோ?' என்று கேட்க, அங்கிருந்த சிலர் இதைக்கேட்டு, உண்மையில் ஆழ்வானுடைய அருளாலேயே இவன் திருந்தினானென்பதை அவர்கள் மட்டும் நன்கு அறிந்தவர்களாகையாலே இந்த மருமத்தை இவர் எப்படியோ தெரிந்து கொண்டாரேயென வியந்து 'நீர் ஆழ்வான் இங்கேறப் போந்ததை ஸேவியாமலிருக்க எப்படி தெரிந்து கொண்டீர்? என்று கேட்க, 'ஆழ்வானுடைய ஸந்நிதானத்தில் தாமஸர்களும் ஸாத்விகர்களாய்த் திருந்துவர்களென்பது ப்ரஸித்தமன்றோ? நெடுநாளாகத் தாமஸனாய்க் கெட்டுப்போனவிவன் இன்று ஸாத்விகபுத்தி யுண்டாகித் திருந்தினனென்றால் ஆழ்வானோடே இவன் ஸந்தித்திருக்கவே வேணுமென்று தோன்றிற்று' என்றாராம் தகப்பனார், "கண்ணபுரத்தம்மானைக் கண்டாள் கொலோ" என்று பாட்டுத்தோறும் சங்கித்துக் கூறினதற்கு இது மிகப் பொருத்தமானதே.

## தெய்வச்செயலின் சிறப்பு

ஒரு மஹாநகரத்தில் ஒரு குடும்பம். அக்குடும்பத்தில் அருமையாகப் பிறந்து வளரும் புதல்வனுக்கு ஓர்நாள் இரவில் மஹத்தான ஜ்வரபாதை உண்டாயிற்று. இரண்டு மைல் தூரத்தில் வைத்தியசாலை இருந்தது. நோயின் தன்மையைச் சொல்லியனுப்பி மருந்து வரவழைக்கலாமென்று கருதிய பெரியார். தமது பன்னிரண்டு வயதுள்ள சிறுவன்கையில் ஒரு ஃபீஸ்-வும் ஒரு ரூபாயும் மருந்து விவரம் குறிக்கும் சீட்டும் கொடுத்து டாக்டரிடம் மருந்து வாங்கிவரும்படி சொல்லி அச்சிறுவனை யனுப்பினார். அவன் கனவேகமாகச்சென்று டாக்டரிடம் சேர்ந்தான். அப்போது இரவு சுமார் ஒன்பது மணி. மின்னலும் காற்றும் இடியுமாயிருந்தது டாக்டர் மருந்துசாலையின் முன்னிலையில் உட்கார்ந்து சில ஆப்தர்களான பெரிய மனிதர்களோடு பேசிக்கொண்டிருந்தார். அச்சமயம் இச்சிறுவன் சென்று செய்தியைத் தெரிவித்ததும் அவர் அன்பர்களோடு வார்த்தையாடுதலில் மிக்க குதூஹலமாயிருந்ததனால் இச்சிறுவனது வேண்டுகோளைக் கணிசியாமலே யிருந்திட்டார். இவனும் சிறிது நிர்ப்பந்தித்துக்

கூறவே, டாக்டர் 'இப்போது முடியாது, காலைவா' என்று அலக்ஷியமாகப் பேசினார். அது கேட்ட சிறுவன் 'ஐயா! நான் இரண்டுமைல் தூரத்திலிருந்து வந்திருக்கிறேன், வீட்டில் அண்ணனுக்கு நோய் மிகக் கடினமானது, இப்போது வேறெங்கும் மருந்து கிடைப்பதும் அரிதாயிருக்கின்றது. இப்போதே தாங்கள் மருந்து தராவிடில் நாளை காலை வரையில் அண்ணன் ஜீவித்திருப்பானென்பதும் ஸந்தேஹம்; அன்றியும் நான் மருந்து வாங்கிக்கொண்டு போகாமல் வெறுங்கையோடு சென்றால் என் உயிர் தக்குவதும் கஷ்டமாகும். தாய்தந்தையர் என்னைப் புடைத்துவிடுவார்கள், ஆதலால் மிகவும் தயவுசெய்து பணம் பெற்றுக்கொண்டு மருந்து தரவேணுமென்று சொல்லி, மருந்தின் விவரம் காட்டும் சீட்டையும் ஸீஸாவையும் ரூபாவையும் மேஜையின்மேல் வைத்துக் கும்பிட்டான்.

இங்ஙனம் கெஞ்சி வணங்கிக் கேட்டதைக் கண்ட அங்குள்ள பெரியோர்கள் மிகவும் மனமிரங்கி டாக்டருக்குச் சாலவும் சிபார்சு செய்தார்கள் மருந்துச் சீட்டைக்கண்ட டாக்டர் அது இரண்டு மூன்று தினுசுகள் சேர்த்துக் கலந்து கொடுக்கவேண்டிய மருந்தாக இருந்தபடியால் ஸ்வாரஸ்யமான வார்த்தையை விட்டு எழுந்திருந்து இதுசெய்துகொடுக்க மனங்கொள்ளாமலேயிருந்தார். ஆனாலும் சிறுவனுடைய கெஞ்சுதலுக்கு மிக இரங்கிய அன்பர்கள் அதிகமாகத் தூண்டவே வருந்தியெழுந்து அதில் ஊக்கமில்லாமலே மருந்துச் சீட்டை நன்றாகக்கவனியாமல் வேறு சில மருந்துகளைக்கூட்டி ஸீஸாவில் கொட்டிக் கொடுத்தனுப்பிவிட்டார். சிறுவனும் மிக்க ஆனந்தத்தோடு அதை வாங்கிக்கொண்டு கனவேகமாகத் திரும்பினான்.

ஐந்து நிமுஷம் பொறுத்தபின் டாக்டருடைய கையில் வலி தாள எரிச்சல் எடுத்தது. உடனே, எந்த மருந்துகளைக் கலந்து கொடுத்தோமென்று கவனிக்கத் தொடங்கினார். ஞாபகப் பிசகினால் அக்நித்ராவகமும் பாய்ஸனான மருந்து மற்றொன்றும் கலந்து கொடுக்கப்பட்டதாகத் திண்ணமாய்த் தெரிந்து கொண்டார். கொடுத்த அந்தமருந்து உட்கொள்ளப்படுமாகில் உடனே குடல் வெந்துபோய் பிராணாபாயம் நேருவது நிச்சயம் அந்தோ! இப்படிப்பட்ட உயிர்க்கொலையான மருந்தைக்கொடுத்து விட்டோமே! சிறுவனோ கனவேகமாகச் சென்று விட்டானே! இது வரையில்மருந்து உபயோகிக்கப்பட்டிருக்குமானால் உயிர்ச்சேதம்நேராமலிருக்கமுடியாதே ஐயோ! கொலைபாதகனாக ஆய்விட்டேனே! அந்தச்சிறுவன் இன்னான் இன்னவிடத்தான், என்றாவது தெரிந்தால் இப்போதே ஓடிப்போய் மருந்தை உட்கொள்ளாதபடி நிறுத்தலாம். இன்ன திக்கிலிருந்து அச்சிறுவன் வந்தானென்பதும் தெரிந்துகொள்ளாமற் போய்விட்டோமே. இரண்டுமைல் தூரத்திலிருந்துவந்ததாகச் சொன்னானேயல்லது இன்னவிடத்திலிருந்து வந்ததாக அவன் தெரிவிக்கவில்லையே! ஐயோ! இந்த நள்ளிருளில் மின்னலும் இடியும் மழையுமான இச்சமயத்தில் எந்தப்பக்கம் ஓடி எந்தவிதமாகஅச்சிறுவனைக்கண்டுபிடிக்க முடியும்? தெய்வமே! என்னை இப்படியும் கொடிய கொலைபாதகனாக ஆக்கிவிடலாமோ! என்று டாக்டர் துடிக்கிறார், தவிக்கிறார் துள்ளுகிறார், கதறுகிறார், அழுகிறார், அன்பர்கள் தேற்றநில்லாது திணறுகிறார்கள். இவருடைய நிலைமை இதுவாயிருக்க;

மருந்து வாங்கிக்கொண்டு களிப்புடன் வேகமாகச்சென்ற சிறுவனோ வென்றால்-இருளில் மழையில் சென்றதனால் வழியில் கால்வழுக்கிக் கீழேவிழுந்து மருந்தும் ஸீஸாவும் கீழே நழுவி உடைந்து போக, மிகுந்த வருத்தத்துடன் அந்த டாக்டரிடமே திரும்பிவந்து 'ஐயா! என்கதி இப்படியாய் விட்டது; இந்தச் செய்தியைச்சொல்லிக்கொண்டு நான் வீட்டிற்குச் சென்றால் என் உயிரை வாங்கிவிடுவார்கள்; மறுபடியும் மருந்து வாங்கிக்கொள்ள என்கையில் ரூபாயுமில்லை; எப்படியாவது என்னைக்காப்பாற்ற வேண்டியது உங்கள் தருமம்; தயவுசெய்து அந்த மருந்தை

மறுபடியும் கொடுத்தீர்களானால் எனது அண்ணனுடைய உயிர் பிழைப்பதற்குமுன் என்னுயிர் பிழைக்கும்' என்று சொல்லி மன்றாடினான்.

இச்செய்தி கேட்டவுடனே டாக்டருக்குண்டான ஆனந்தத்திற்கு அளவுதான் இருக்குமோ? அச்சிறுவனைத் தலைமேல் தூக்கிக்கொண்டு கூத்தாடினார், குலாவினார்; தெய்வத்தைப் போற்றினார் புகழ்ந்தார் இன்னுமென்னென்னவோ செய்தார். தெய்வபக்தி அதிகரிக்கப்பெற்றார், உடனிருந்த அன்பர்களைத்தழுவி எழுந்தும் பறந்தும் துள்ளிக்குதித்தார். உடனே அந்தச்சிறுவனைத் தமது மோட்டார்காரில் உட்காரவைத்துக்கொண்டு தாமே நோயாளியின் வீட்டுக்குநேரில்சென்று போதுமானசிகித்ஸையைஇனமாகச்செய்துவிரைவில்குணப்படுத்தினார்.

## திருக்கச்சிநம்பி வைபவம்

### (19—11—78-ல் பூவிருந்தவல்லியில் P. B. A. ஸ்வாமியின் உபந்யாஸம்)

திருக்கச்சிநம்பிகளின் தனியனில் "ராமாநுஜமுநேர் மாந்யம்" என்றிருப்பது ஸுப்ரஸித்தம்; 'எம்பெருமானார்க்கு பஹுமாந்யர்' என்றபடி, உண்மையில் ஸ்வாமிக்கு நம்பிகளிடமிருந்த கௌரவ ப்ரதிபத்தி ஒப்பற்றதே நம்பிகள் எந்தவருணத்தைச் சேர்ந்தவர்? என்ற விசாரம் பலர் செய்வதுண்டு. அந்தவிசாரத்தில் இறங்க நமக்கு விருப்பமில்லை, எக்குலத்திலும் மிகச் சிறந்ததான தொண்டக் குலமே இவருடைய குலமாகும். "ஸ்மப்யத்ராபி ஜாயந்தே யோகிநஸ் ஸர்வயோநிஷு, ப்ரத்யக்ஷிதாத்ம நாதாநாம் நைஷாம் சிந்த்யம் குலாதிகம்' என்றொரு ப்ரமாணவசனம் நம் ஆசாரியர்களால் எடுத்துக்காட்டப் பட்டுள்ளது 'யோகிகள் எல்லா யோனிகளிலுமே ஜனிக்கின்றார்கள்; இவர்கள் எம்பெருமானை ஸாக்ஷாத்கரித்தவர்களாகலால் இவர்களின் குலம் முதலியவற்றைப்பற்றி ஆராய்வது கூடாது' என்பது மேலெடுத்த ச்லோகத்தின் கருத்து எம்பெருமான் எப்படி தேவமநுஷ்ய திர்யக்யோநிகளெல்லாவற்றிலும் திருவவதாரம் செய்தருள்கின்றானோ அப்படியே அவனடியார்களும் "எந்நின்ற யோனியுமாய்ப்பிறந்து பெருமைபொலிய நிற்கிறார்கள் "ப்ராதுர்ப்பாவைஸ் ஸுரநரஸமோ தேவதேவஸ் ததீயா:" என்கிற ச்லோகத்தில் இவ்வர்த்தம் மிக விளக்கமாகக் காட்டப்பட்டது. அப்படி எம்பெருமானோடொப்பப் பெருமைபெற்ற மஹாகுல ப்ரஸூதர்களில் திருக்கச்சிநம்பிகள் தலைவராய் விளங்கினர் இவர் திருவரங்கம் பெரிய கோயிலில் ஆளவந்தாருடைய திருவடி நிழலிலே யொதுங்கி ஸாமான்ய விசேஷ சாஸ்த்ரங்களை யெல்லாம் கற்று உணர்ந்து எம்பெருமானுக்குக் கைங்கரியம் பண்ணுவதே பரமபுருஷார்த்தமென்று கடைப்பிடித்தார். அர்ச்சாவதார எம்பெருமானுக்குத் திருவாலவட்டத் திருத்தொண்டு செய்வதில் இவர்க்கு இயற்கையான குதூஹலமிருந்தது; கோயிலில் அழகிய மணவாளனுக்கு அந்தத் திருத்தொண்டு செய்யத் தொடங்கினார். உபயகாவேரி மத்யத்தில் சயனித்திருக்கின்ற அப்பெருமானுக்குத் தாபம் சிறிதுமில்லாமையாலே "திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி திரைக்கையாலடி வருடப் பள்ளி கொள்ளாநின்ற நமக்கு இத்தொண்டு அபேக்ஷிதமாக இல்லையே! என்று அப்பெருமாள் அருளிச்செய்ய, அவ்விடம் விட்டுத் திருவேங்கட மலையேற வந்து சேர்ந்து அங்கே திருவேங்கடமுடையானுக்கு அந்தக் கைங்கர்யத்தைச்செய்ய ஆரம்பித்தார்.

அந்தப்பெருமானும் "குளிரருவி வேங்கடத்தில் குளிரநிற்கும் நமக்கு இந்தத் திருத்தொண்டு அபேக்ஷிதமாக இல்லையே; அத்திகிரியருளாளப் பெருமாள் நான்முகன் செய்த அயமேத வேள்வியில் தீயினில் தோன்றியவராதலால் அவர்க்குத் தாபம் மிக்கிருக்கும்; இக்கைங்

கரியம் அவர்க்கு மிக அபேக்ஷிதமாயிருக்கும்; அங்கேறச் சென்று தொண்டு செய்துவாழ்வீராக" என்று நியமிக்க, அந்த நியமனத்தைச் சிரமேற்கொண்டு அங்கு நின்றும் புறப்பட்டு ஸ்ரீ ஹஸ்திசைல சிகரோஜ்ஜ்வல பாரிஜாதனை பேரருளாளனுடைய திருவடிவாரத்திலே விடைகொண்டு திருவால வட்டமும் கையுமாய் 'ஒழிவில்காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலாவடிமை' செய்து வந்தார். இக்கைங்கரியம் பேரருளாளனுக்குப் பரமப்ரீதிகரமாக இருந்தபடியாலே அர்ச்சாவதார ஸமாதியைக்குலைத்துக்கொண்டும் நம்பியோடு வார்த்தையாடுவதென்கிற முறை ஏற்பட்டது 'தேவப்பெருமாள் திருக்கச்சிநம்பியோடு வார்த்தையாடுகிறார்,என்கிற ப்ரஸித்தி எங்கும் பரவியது' [சிலர் இது அஸம்பாவிதமென்றும் கல்பிதமான ஐதிஹ்யமென்றும் சொல்லத் தலைப்பட்டிருக்கிறார்கள். மணவாளமாமுனிகள் அருளிச்செய்த தேவராஜமங்களத்தில் *ஸ்ரீ காஞ்சீபூர்ணமிச்ரேண ப்ரீத்யா ஸர்வாபிபாஷிணே, அதீதார்ச்சாவ்யவஸ்தாய ஹஸ்த்யத்ரீசாய மங்களம்*என்றுள்ளது ப்ரஸித்தம். அர்ச்சாவதார வரம்பைக் கடந்து பரமப்ரீதியினால் திருக்கச்சி நம்பியோடு எல்லாவார்த்தைகளையும் அருளிச் செய்தவரான தேவப்பெருமாளுக்கு மங்களம்— என்பது இந்த ச்லோகத்தின் கருத்து. *பொய்யிலாத மணவாளமாமுனி புந்தியிலே புகுந்த விஷயத்தில் அவிச்வாஸமுண்டாக ப்ரஸக்தியில்லை யென்று இவ்வளவோடு நிற்போமிப்போது]

இப்படிப்பட்ட பெருமை வாய்ந்த நம்பிகளின்ஜ்ஞாநாநுஷ்டானச் செல்வச் சிறப்பையும் பக்திவிரக்திகளின் விலக்ஷணபரிபாகத்தையும் கண்டு வியந்த எம்பெருமானார், தாம் இவருடைய திருவடிகளிற் பணிந்து உய்வு பெறவேணுமென்று பாரித்தார்; பலவாறு அநுவர்த்தித்தார் நம்பிகள் இதற்குச்சிறிதும் இசைவு காட்டவில்லை *போனகஞ் செய்த சேடமாவது இவரிடத்தில் பெற்றுவாழ்வோமென்று முயன்றார்; அதுவும் கைகூடவில்லை யென்பது சரித்திரமுணர்ந்தார்க்கு விசதம். பின்பு எவ்வாசிரியர் திருவடிகளில் ஆச்ரயிப்பதென்கிற விசாரம் ஸ்வாமிக்குப் பெரிதுமுண்டாயிற்று. அதை நம்பிகளிடத்தில் விண்ணப்பம் செய்து தேவப்பெருமாளுடைய திருவுள்ளத்தை அவர் மூலமாகத் தெரிந்து கொள்வோமென்று தோன்றி, அத்தோடு வேறு சில சாஸ்த்ரார்த்த விசிகித்ஸைகளையும் தீர்த்துக்கொள்ள விரும்பித் திருக்கச்சிநம்பிகள்பாடே விஜ்ஞாபித்துக் கொண்டார். "அடியேனுடைய உள்ளத்தில் சில ஜிஜ்ஞாஸைகள் இருக்கின்றன; தேவப்பெருமாள் மூலமாக தேவரீர் தெரிந்து க்ருபை செய்தருளவேணும்" என்று விண்ணப்பஞ்செய்தார். நம்பிகளும் அன்றிரவு தேவப்பெருமாளுடனே வார்த்தையாடுமளவில் ஸ்வாமியின் கோரிக்கையை விண்ணப்பம் செய்து பெருமாள் பக்கலிலே ஆறு வார்த்தைகள் பெற்று ஸ்வாமியிடத்தே வெளியிட்டதாக ப்ரஸித்தமான வார்த்தைகளை முன்னோர்கள் ஸங்க்ரஹித்தருளியுள்ளார்கள்; வடிவழகியநம்பிதாஸரென்கிற பரம பக்தரான தமிழ்க்கவி யொருவர் தாமியற்றிய எம்பெருமானார் வைபவமென்னுஞ் செய்யுட் காவியத்தில் பணித்த இரண்டு செய்யுட்கள் கேளீர்;—

'செப்புகின்ற பரதத்வம் யானேயென்னச் செப்புதி,வே
றெப்பிலாதாய்! தரிசனமும் பேதமென்றே யுரைத்திடுக
தப்பிலாத வுபாயமதும் ப்ரபத்தியென்றே சாற்றிடுக
அப்ப!புகல்க விவையன்றி நினைவும்வேண்டா அந்திமத்தில்;

இந்தச்சரீர வவதானந்தன்னி லிசையும் மோக்கமது
அந்தமில்லாக் குணத்தினனுக் காசாரியனும் பெரியநம்பி
சிந்தைதன்னுளிவை யெல்லாஞ் சிந்தித்திருந்தானினையாழ்வான்
முந்தியிவை நீமொழியென்று மொழிந்தருள்வா னருளாளன்".

இவ்விஷயத்தில் வடமொழி ச்லோகங்களுமிவைகாணீர்;—

> அஹமேவ பரம் தத்வம் தர்சநம் பேத ஏவ ச,
> மோக்ஷோபாய: ப்ரபத்திஸ் ஸ்யாத் அந்திமஸ்ம்ருதிவர்ஜநம்,
> தேஹாவஸாநே முக்திஸ் ஸ்யாத் பூர்ணாசார்யஸமாச்ரய:,
> வார்த்தாஷட்கமிதம் லேபே காஞ்சீபூர்ணமுகாத் குரு: •

இவ்வாறு வார்த்தைகளைத் திருக்கச்சிநம்பி மூலமாக ஸ்வாமி பெற்றது ஏக காலத்திலேயே என்பது ஒரு பக்ஷம்; அவ்வப்போதுகளில் தனித்தனியே பெற்ற வார்த்தைகள் ஒன்று சேர்த்து ஆறு வார்த்தைகளாக அநுஸந்திக்கப்பட்டு வருகின்றன வென்பது மற்றொரு பக்ஷம்.

இது எங்ஙனேயாயினுமாகுக, இவ்வாறு வார்த்தைகளில் தேறுகின்ற அர்த்தங்கள் ஸகல சாஸ்த்ரார்த்த தத்வங்களையும் கையிலங்கு நெல்லிக் கனியாக வுணர்ந்திருக்கும் எம்பெருமானார்க்குத் தெரியாதவையோ? நன்கு தெரிந்திருக்கக் கூடிய அர்த்தங்களேயன்றோ இவை; இவற்றை இந்தமுகமாகப் பெற வேண்டிய அவச்ய மென்ன? என்று சிலர் கேட்பதுநேர்மையன்று; தெரிந்த அர்த்தங்களாயிருந்தாலும் அவற்றை நிஸ்ஸந்தேஹமாக த்ருடப்படுத்திக் கொள்ளுதல் ப்ராப்த மன்றோ. (1) ஸ்ரீமந் நாராயணனே பரதத்வமென்றும், (2) ஸம்ஸார தசையோடு முக்தி தசையோடுவாசியற எங்கும் ஜீவ பர பேதம் பாரமார்த்திகமென்றும், (3) கர்மஜ்ஞான பக்தி யோகங்களன்றிக்கே சரணாகதியே ஸ்வரூபாநுரூபமான உபாயமென்றும் (4) பகவத் விஷயமான அந்திமஸ்ம்ருதி இருந்தே தீரவேணுமென்கிற நிர்ப்பந்தம் உபாஸகர்களுக்கே யல்லது ப்ரபந்நர்களின் விஷயத்தில் அந்த நிர்ப்பந்தமில்லை யென்றும், (5) ஸஞ்சித கருமங்கள் கனத்திருந்தாலும் ப்ராரப்தகர்மாநுபவத்தை இந்த தேஹத்தோடே முடித்திட்டு அவ்வளவிலே மோக்ஷப்ராபண மென்றும், (6) பெரியநம்பி திருவடிகளிலே யாச்ரயித்துத் திருவிலச்சனை பெறுவதென்றும் ஆக இவ்வாறு வார்த்தைகள் உணரத்தக்கன. இவ்வாறு வார்த்தைகளுக்கு விபுலமான விவரணம் செய்திருக்கிறோம்.

ஆண்டாள் திருப்பாவையில் பாசுரந்தோறும் எம்பெருமானாருடைய பெருமையை [ஸ்வாபதேசார்த்தமர்யாதையில்] வெளியிடுவதுண்டே; அதில் *வையத்து வாழ்வீர்காள்!* என்கிற இரண்டாம்பாட்டில் ஈற்றடி *உய்யுமாறெண்ணி உகந்தேலோரெம்பாவாய்* என்பது; இங்கு உய்யும் ஆறு எண்ணி— உஜ்ஜீவநமான ஆறுவார்த்தைகளைச் சிந்தித்து உகந்தமை கூறினதாக ரஹஸ்யார்த்த மறியத்தக்கது.

# திவ்யப்ரபந்த பரீக்ஷை

## வினாக்களும்—விடைகளும்

*இராகவாசாரியர்க்கும் கண்ணனுக்கும் ஸம்வாதம் மணவாள மாமுனிகள் ஸந்நிதியில்;*

**கண்ணா! நான் நாளை காலை அல்லது மாலை உன்னோடு கூடத் திருமாலிருஞ்சோலை மலை சென்று அழகியான் திருவடியைத் தொழுதுவர நிச்சித்திருந்தேன்; நீயும் வா.**

(இந்த வாக்கியத்திலுள்ள சொற்களின் வரிசையில் திவ்யப்பிரபந்தப் பாசுரங்கள் சொல்லவேணுமென்பது இராகவனுடைய கருத்து, அப்படியே கண்ணன் விடையளிக்கிறான்.)

(கண்ணா!) ×கண்ணா! நான்முகனைப் படைத்தானே! [பெரியாழ்வார் திருமொழி]
(நான்) ×நான்முகனை× [நான்முகன் திருவந்தாதி]
(நாளை) ×நாளை வதுவை மணமென்று× [நாச்சியார்]
(காலை) ×காலை யெழுந்திருந்து× [நாச்சியார்]
(அல்லது) ×அல்லதோரரணு மவனில்× [திருவாய்மொழி]
(மாலை) ×மாலையும் வந்தது மாயன்வாரான்× [ ஷை ]
(உன்னோடு) ×உன்னோடுடனே× [நாச்சியார்]
(கூட) ×கூடச்சென்றேனினியென் கொடுக்கேன்× [திருவாய்.]
(திரு) ×திருமகளும் மண்மகளும்× [முதல்திருவந்தாதி]
(மால்) ×மாலை நண்ணித் தொழுது× [திருவாய்மொழி]
(இரு) ×இருந்தண்மாநிலம்× [பெரிய திருமொழி]
(சோலை) ×சோலைத்திருக்கடித்தானத்துறை× [திருவாய்மொழி]
(மலை) ×மலைகொண்டு× [திருவிருத்தம்]
(சென்று) ×சென்று வணங்குமினோ× [நான்முகன்]
(அழகியான்) ×அழகியான் தானே× [ ஷை ]
(திருவடியை) ×திருவடியை நாரணனை× [திருவாய்மொழி]
(தொழுது) ×தொழுது முப்போதும்× [நாச்சியார் திருமொழி]
(வர) ×வரவாறொன்றில்லையால்× [பெரிய திருவந்தாதி]
(நிச்சித்து) ×நிச்சித்திருந்தேன்× [திருவாய்மொழி]
(இருந்தேன்) ×இருந்தே னிருவினைப் பாசம்× [இராமானுச நூற்றந்தாதி]
(நீயும்) ×நீயும் பாங்கல்லைகாண்× (திருவாய்மொழி)
(வா) ×வா போகுவாவின்னம் வந்தொருகால்× [பெருமாள் திருமொழி]

## அத்யாபக ஸ்வாமிகள் இருவரின் ஸம்வாதம்

**(ரங்காசாரியரும் ராகவாசாரியரும் பேசுகிறார்கள்)**

(ரங்.) ஸ்வாமிந்! தேவரீர் திவ்யப்ரபந்தத்தில் நல்ல உபஸ்திதி யுடையவரென்பதை யடியேனறிவேன். அடியேன் ஜிஜ்ஞாஸயா சில கேள்விகள் கேட்கிறேன், மனம் மகிழ விடை தரவேணும் கேட்கிறேன், ஆழ்வார்கள்பாடின ஊர்கள் எத்தனை? ...(ராக.) 21 ஊர்கள்தான்

(ரங்.) என்ன இப்படி ஸாதிக்கிறதே; நூற்றுக்கணக்கிலன்றோ பாடல் பெற்ற தலங்களைச் சொல்லிவருகிறார்கள்; வேடிக்கையாக ஸாதிக்கவேண்டாம், இருபத்தொன்றுதானா?

(ராக.) தேவரீர் 'ஆழ்வார்பாடின ஊர்கள் எத்தனை?' என்று கேட்டபடியால் அடியேன் விண்ணப்பித்ததில் தவறு இல்லை. அந்த ஊர்களை விஜ்ஞாபிக்கிறேன், கேட்டுக் கொள்வது. ×உலகேத்துமாழியானத்தியூர் (ஹஸ்திகிரி) திருவெவ்வுளூர், திருநின்றவூர், திருக்கோவலூர், (கூந்தல் கமழும்) கூடலூர், திருக்கண்டியூர், திருவிந்தளூர், திருநாங்கூர் திருநறையூர், உறையூர், கரம்பனூர், சிறுபுலியூர், தேரழுந்தூர், ஆதனூர்,

திருக்கோட்டியூர், திருமோகூர். ஸ்ரீவில்லிபுத்தூர், திருக்குருகூர். திருக்கோளூர், குட்டநாட்டுத் திருப்புலியூர், திருவண்வண்டூர் ஆக இருபத்தோர் ஊர்கள் தான் ஆழ்வார் பாடியவை யென்று உள்ளபடி சொல்லுகிறேன்.

(ரங்க.) இப்போது விஷயம் புரிந்தது. இனி இந்த வழியிலேயே வினவுகின்றேன், ஆழ்வார்கள் பாடிய நகரங்கள் எத்தனை?

(ராக) விஜ்ஞாபிக்கிறேன், எண்ணிக்கொள்ள, பரமேச்சுரவிண்ணகரம், காழிச்சீராம விண்ணகரம், வைகுந்த விண்ணகரம் அரிமேயவிண்ணகரம்,நந்திபுரவிண்ணகரம்,விண்ணகரம் (திருவிண்ணகர்)

(ரங்.) ஆழ்வார்கள் பாடிய நகர்கள் எத்தனை?

(ராக) திருப்பேர்நகர், திருவல்லவாழ் நகர், கண்டமென்னும் கடிநகர், சிரீவரமங்கல நகர், அனந்தபுரநகர், கண்ணபுரநகர். (திருவிண்ணகர் நன்னகரே.)

(ரங்) ஆழ்வார்கள் பாடிய குடிகள் எத்தனை?

(ராக) திருவெள்ளியங்குடி, புள்ளம்பூதங்குடி, திருக்கண்ணங்குடி, திருப்புளிங்குடி, திருக்குறுங்குடி.

(ரங்) ஆழ்வார்கள் பாடிய 'கா' எத்தனை? 'கால்' எத்தனை?

(ராக.) கா இரண்டு. கால் ஒன்று, திருவெஃகா, திருத்தண்கா, — திருத்தண்கால்.

(ரங்) ஆழ்வார்கள் பாடிய மலை எத்தனை?

(ராக) திருவேங்கடமலை, திருநீர்மலை, திருமெய்யமலை, வானமாமலை, திருமாலிருஞ் சோலை மலை

(ரங்.) ஆழ்வார்பாடிய மங்கையும், மங்கலமும் எத்தனை?

(ராக) திருக்கண்ணமங்கை, வரகுணமங்கை, துலைவில்லி மங்கலம், சிரீவரமங்கை' மங்கலம்.

(ரங்.) ஆறு எத்தனை? கரை எத்தனை? அறை எத்தனை? ஆணி எத்தனை?

(ராக) திருச்சிற்றாறு, திருவாட்டாறு, — திருக்காட்கரை, ஆற்றங்கரை, (கபிஸ்தலம்) திருவெள்ளறை-திருப்புல்லாணி.

(ரங்.) உத்தமம் எத்தனை? (ராக) உத்தமம் ஒன்றுதான், வண்புருடோத்தமம், அப்படியே உத்தமனும் ஒருத்தன் தான். காம்பனூர் உத்தமன்,

(ரங்.) கூடம் எத்தனை? (ராக) திருமணிக்கூடம். சிருச்சித்ரகூடம்.

(ரங்) 'ஐ'கார வீற்றதான ஊர்கள் எத்தனை?

(ராக.) தஞ்சை, குடந்தை, சேறை, நாகை, திருக்கடன்மல்லை, திருவிடவெந்தை, வேளுக்கை, குருகை (குருகூர்) அழுந்தை.

(ரங்.) அகம் எத்தனை? (ராக.) ஊரகம், நீரகம், காரகம், பேரகம் (திருப்பேர் நகர்)

(ரங்.) புரம் எத்தனை?

(ராக.) திருவயிந்திரபுரம், திருவனந்தபுரம், கணபுரம்.

(ரங்) கோயில் எத்தனை?

(ராக) திருவரங்கம் பெரிய கோயில், செம்பொன்செய்கோயில், நாச்சியார் கோயில் மணிமாடக் கோயில்.

(ரங்.) பாடி எத்தனை? (ராக) காவளம்பாடி, திருவாய்ப்பாடி

(ரங்.) கிராமம் எத்தனை? ஆச்ரமம் எத்தனை? அரணியம் எத்தனை, குன்றம் (குன்று) எத்தனை? குளம் எத்தனை? இல் எத்தனை? தானம் எத்தனை?

(ராக) கிராமம் — சாளக்கிராமம் ஆரணியம் — நைமிசாரணியம், குன்றம் — சிங்கவேள் குன்றம் (அஹோபிலம்) குளம் — திருவெள்ளக்குளம், பெருங்குளம். இல் — அன்பில். தானம் — திருக்கடித்தானம்.

(ரங்.) கால் எத்தனை? கை எத்தனை? வாய் எத்தனை? மூக்கு எத்தனை? முலை எத்தனை? (ராக) கால் ஒன்றே — திருத்தண்கால் கைகள் — திருநாகை, நாங்கை, கண்ணமங்கை, சிரீவரமங்கை வாய் ஒன்றே — திருநாவாய் மூக்கு ஒன்றே — குடமூக்கு (குடமூக்கில் கோயிலாக்கொண்டு). முலை இரண்டு தென்னனுயர் பொருப்பும் தெய்வ வடமலையும் என்னுமிவையே முலை' என்று திருமங்கையாழ்வார் இரண்டே யென்கிறார்.

(ரங்.) இன்று இவ்வளவோடு நிறுத்திக் கொள்ளலாம் என்று நினைக்கிறேன். இது ஒரு விலக்ஷணமான திவ்ய தேசானுபவம் என்பதை எல்லாரும் அறியார் ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீயதாண்டவன் ஒருவர் தாம் அறிந்து திருவுள்ளமுகக்கும்படியாகும். ... ...

# மதுரையன்பர்களின் மஹத்தானதோர் பணி

"ஸ்ரீ ராமாநுஜன்" கார்யாலயத் துணைவன்.
தி. அ. அனந்தாழ்வான்.

மதுரைமாநகரில் உயர்திரு மா. செல்லப்பெருமாள் கோனார் என்னும் பெரியார் நமது பத்ராதிபஸ்வாமியின் திருவடிகளில் பேரன்பு பூண்டவர் என்பதை அடியேன் இரண்டொரு வருஷ காலமாக அறிவேன். நம்ஸ்வாமியோடு நெருங்கிப்பழகினவர்கள் காஞ்சிப்ராந்தங்களிலும் சென்னை மாநகரிலும் பலர் உள்ளார்கள், அவர்களின் அன்பும் ஆர்வமும் ஏகதேசம் என்னும் சொல்லலாம்படி இப்பெரியாரின் அன்பு காணப்படுகிறது. இப்பெரியார் நமது ஸ்வாமியின் நூல்களையும் ஸ்ரீராமாநுஜன் பத்திரிகையையும் மிகமிக மதித்து அநவரதமும் அவற்றையே போதுபோக்காகக் கொண்டவர் எனத் தெரிகிறது. இவர் சில மாதங்களுக்குமுன்பு, நம் ஸ்வாமி வெளியிட்டருளின நூல்களையெல்லாம், (அதிலும் முக்கியமாக) உபந்யாஸ நூல்களையெல்லாம் பெற விரும்பிக் கடிதமெழுதினார். பல நூல்கள் அனேக வருஷங்களுக்கு முன்பு அச்சாகி வெளிவந்தவை இப்போது துர்லபங்களாகி விட்டபடியால் அப்பெரியார்க்கு நாம் சில புத்தகங்களை மட்டுமே அனுப்பமுடிந்தது. அதனால் அவர்க்கு மனக்குறை மிகவுமுண்டாகி, அருமையாய்ப்போன உபந்யாஸ நூல்களை யெல்லாம் தாம் சில நண்பர்களுடன் சேர்ந்து தம் இருப்பிடமான மதுரையிலேயே மறுபதிப்புச் செய்ய முடிவு செய்து, அவவிடத்தில் வாழும் ஸ்ரீமான் உ, வே, வித்வான் R. ரங்கராஜன், M A., ஸ்வாமியையும் மற்றுஞ் சில அறிஞர்களையும் துணைகொண்டு, நம் ஸ்வாமியின் பழைய உபந்யாஸ நூல்களைச் சம்பாதித்து

மதுரையிலேயே அச்சிடத்தொடங்கிவிட்டார். மதுரை ஜில்லா ஜட்ஜ் ஆன உயர்திருவாளர் M. A. முருகேசன் அவர்களும், சென்னைத் திருக்கோயில் பத்திரிகையின் ஆசிரியரான உயர்திரு N R. முருகவேள் M.A. M.O.L. அவர்களும் மற்றுஞ் சில பெரியார்களும் குழாங் கூடி இவ்வரியபெரிய பணியை மேற்கொண்டிருப்பதாகத் தெரியவருகிறது. முதற் புத்தகமாக "உபந்யாஸக ஹஸ்த பூஷணம்" என்னும் நூல் இன்று காணக்கிடைத்தது. இதில் வெளிவந்திருக்கும் விஷயங்கள், கீழே காண்க.

1 முன்னுரை

2 தென்னாசார்ய ஸம்ப்ரதாயார்த்த நுட்பங்கள்

3 நம்மாழ்வார் ஸ்ரீஸூக்தி அனுபவம் (வளவேழுலகு)

4 பெருஞ்செல்வம் நெருப்பாக

5 பண்டிதர்களும் பரமபக்தர்களும்

6 ஆசாரியர்கள் மேகத்தையொத்தவர்கள்

7 தேசிக ஸூக்தியில் ஓர் ஐதிஹ்யம்

8 ஸ்ரீ ராமாயணமும் நம் ஆசாரியர்களும்

9 விசிஷ்டாத்வைத நுட்பம்

10 ஐந்து சிஷ்யர்களின் இதிஹாஸம்

11 காதல் அன்பு வேட்கை அவா

12 பகவத் விஷயாதிகாரிகள்

13 ஸர்வ ரக்ஷக ரக்ஷணம்

14 அத்ருஷ்டார்த்தமென்னும் சரணாகதி அனுஷ்டானத்தைப்பற்றி

அடுத்த இதழில் இதைப்பற்றின விரிவுகள் காண்க.

ராபர் இரண்டாம் பக்கத்தின் தொடர்ச்சி

ஸ்வாமிகள் எழுந்தருளினார்கள். திவ்யப்ரபந்தம்வைக்கு திருநகரி, திருநாங்கூர், திருக்கண்ண புரம் திருவிந்தளூர் திவ்யதேசங்களிலிருந்து ஸ்வாமிகள் எழுந்தருளி விமரிசையாய் நடத்திக் கொடுத்தார்கள் சாத்துமுறைதினம் கோவில் கந்தாடை அப்பன் உவே. ராமானுஜாசார்ய ஸ்வாமி எழுந்தருளி சாத்துமுறையும் திருக்கல்யாணமும் நடந்தது அன்று கோ. க. அப்பன் ஸ்வாமி நாமசங்கீர்த்தனப் பெருமையை உபந்யஸித்தார். திருநகரி எம்பார் உவே. திருவேங்கடாசார்ய ஸ்வாமி ஆசார்ய பக்தியைப்பற்றி உபந்யஸித்தார். பொலிக! பொலிக! பொலிக!



## அன்பர்களுக்கு அறிவிப்பு:-

நமது மார்கழித்திங்கள் முழுவதும் திருப்பாவை காலக்ஷேபத்தின் பொருட்டு நமது பத்ராதிப ஸ்வாமிகள் வழக்கப்படி சென்னையில் உப்பட்டூர் ஆழ்வார் செட்டியார் ராமானுஜ கூடத்தில் எழுந்தருளியிருப்பராதலால் 15—12—78௳ முதல் 14—1—79வரை அன்பர்கள் ஸ்ரீஸ்வாமிக்கு எழுதும் தபால்களை அடியிற்கண்ட விலாசத்திற்கு எழுதவேண்டியது.

To Sri Jagadacharya, P. B. ANNANGARACHARYA,
48, GOVINDAPPA NAICK STREET
MADRAS-600001

**முக்கிய கவனிப்பு-:**

ஸ்வாமிக்கு யாரும் இன்லாண்டு கவரில் எழுதக் கூடாது; வெள்ளைத்தாளில் பெரிய எழுத்தில் விட்டு விட்டு எழுத வேண்டும். ஸ்வாமியின் திருமேனி பாங்கு ஒருவாறு உள்ளது. சென்னை வாஸிகளான அன்பர்களின் மிக்க நிர்ப்பந்தத்தினாலேயே அவ்விடம் எழுந்தருளுகிறார். ...டாள் திருவருளால் இனிது நடைபெறவேணும்.

இப்படிக்கு.

க்ரந்தமாலா ஆபீஸ் கார்யதர்சி.

## P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்.

1. நாலாயிர திவ்யப்ரபந்த வுரைகள்,
2. பூர்வாசார்ய தமிழ்ப்ப்ரபந்த ,,
3. ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர ,,
4. ஆழ்வாராசார்யப் ப்ரபாவ நூல்கள்,
5. இதிஹாஸ புராண சரித்திர ,,
6. ரஹஸ்யார்த்த விளக்க ,,
7. வேதாந்தப் பொருள் விளக்க ,,
8. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க ,,
9. வேதவிசாரலக்ஷண நூல்கள்.
10. லோகாபிராம உபந்யாஸ நூல்கள்.
11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்.
12. உபந்யாஸக ஸௌபாக்ய நூல்கள்.
13. வடமொழி நூல் திரள்கள்.
14. ஹிந்தீ பாஷையில் நூல்கள்.
15. தெலுங்கு பாஷையில் ,,
16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்.

விரிவான கியாடலாகுகள் தருவித்து விவரங்காண்க

சந்தாப்பணம் M. O. செய்பவர்கள்

P. B. ANNANGARACHARYA.

*Editor*, GRANTHAMALA, Kancheepuram-631503

என்ற விலாசத்திற்கு அனுப்புக.

If un-delivered please return to:

P. B. ANNANGARACHARYA,

Kanchipuram, Pin Codo-631503.

To

Sriman




133. Sri M.Kannapiran Mudali...
31, Mosque Street,
MADRAS - 600 015.

Edited and Published by P. B. Annangaracharya Swami
and Printed by E. Devarajan at Sri Kamakshi Press.
No. 44-c, Thirukatchinambi Street, Kancheepuram-631503.